# அடுத்த இதழிலிருந்து...

## எப்படிக் கதை எழுதுகிறார்கள்?

ரா.கி.ரங்கராஜன்



கதை எழுத வேண்டும் என்று ஆர்வம் துளிர்க்கிறது. அட.. இந்தக் கதை நமக்கும் தோன்றியதுதான். நாம் கூட.... எழுதலாம் போலிருக்கிறதே. ஆனால் எப்படி ஆரம்பிப்பது எப்படி முடிப்பது என்று தயக்கம் தடை செய்கிறதா? கவலையே வேண்டாம். உங்களுக்காகவே இந்த தொடர். கதை எழுதும் வித்தையைக் கற்றுக் கொடுக்கிற தொடர்.

## சிலுமிஷ சிக்னல்

ராஜேந்திரகுமார்



அன்று ஒரு 'வால்கள்' மூலம் ஹா.. ஹா என்று சிரிக்க வைத்ததுடன் வியப்பில் 'நே' என்று விழிக்கவும் வைத்தவர் ராஜேந்திரகுமார்.

இனி.. மேகலாவில் இதழுக்கொரு 'ஹா.. ஹா' கதை ஸாரி... சிரிப்புக்கதை எழுத இருக்கிறார்.

உம்மணா மூஞ்சிகளுக்குப் படிக்கக் கொடுங்கள். சிரிக்க வையுங்கள்.

## உண்மைக்கதைகள்

இந்துமதி



உள்ளத்தை உருக்கும் தொடர்.

இப்படியும் நடக்குமா? நாமும் இந்த மனிதர்கள் மத்தியில்தான் இருக்கிறோமா? என்று இதயத்தைப் படபடப்பு கொள்ள வைக்கும் நிஜக்கதைகள்! - இதழுக்கு ஒவ்வொன்றாக!

## கற்றுக் கொண்டால் குற்றம் இல்லை

பாலகுமாரன்



வாழ்க்கையில் எதாவது செய்து உயரவேண்டும் என்ற உங்களுக்கு, என்ன செய்வது எப்படி செய்வது என்று குழப்பம்.

ஊரைத் தெரிந்து கொள்ள வேண்டும் உலகைத் தெளிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களே... முதலில் உங்களைப் புரிந்து கொண்டீர்களா?

பயணத்தைத் துவக்கும் முன் பாதையைத் தீர்மானிக்க வேண்டாமா? அதற்காக சில ஒழுங்கு முறைகளைக் கற்றுத் தருகிறார் பாலகுமாரன். நீங்கள் சாதனைச் சித்திரம் வரைய அடிப்படைச் சுவர் அமைத்துத் தருகிறார் இந்தத் தொடரில்.

# எட்டிப் பார்க்குது... 

இந்த மாதம் தொலைக்காட்சி பகுதியை காணோமே! உங்களுக்கு மறதியா?

— ச.விஜயன்,
பு.புளியம்பட்டி.

(உங்களுக்கு இவ்வளவு கவன பிசகு இருக்கக் கூடாது விஜயன் சார்! தொலைக் காட்சிக்கு பதிலாகத்தான் இந்த பகுதி!)

முதல்வர் பேட்டியை கடைசி பக்கத்திலா போடுவார்கள்? எங்களுக்கு முன்பே தெரிந்து விட்டது ஏப்ரலின் மகிமை!

— உதயா முருகானந்தம்,
திருவாய்மூர்.

(மேகலா வாசகர்னா சும்மாவா? உங்களுக்கு ஒரு ஷொட்டு)

சோதனைகளையும், வேதனைகளையும் துணிவோடு தாங்கிக் கொண்டால் மட்டுமே ஒருவன் சாதனைகள் புரிய முடியும் என்பதற்கு 'தராசு' ஷ்யாம் சிறந்த எடுத்துக்காட்டு.

— எம்.தியாகராஜன்,
சென்னை-28.

ஷ்யாமை, ஸ்யாம் தூரிகைகளால் கொண்டு வந்த விதத்தை பார்த்ததுமே கிளாப்ஸ்... அடித்து விட்டேன். அந்த தூரிகை கைகளுக்கு மேகலா தங்க காப்பிட வேண்டும்.

— காகை. ஜெ.ஜெயக்குமார்,
காங்கேயம்-1

(உங்க செலவில் தானே? போட்டுட்டா போச்சு!)

மேகலா மாதமிருமுறையா? வாவ்... கோடையில் ஏதாவது குழப்பமா? இல்லை நிஜமா?

— ஆர்க்.எழிலன்,
திருச்சி-2.

(ஜுன் மாதம் வரட்டும். அப்ப தெரியும் சேதி! இவ்வளவு சந்தேகமா உங்களுக்கு?)

என்ன சார்? லேடீஸ், லேடீஸ் என்று தூக்கி விடுகிறீர்களே? ஆண்களுக்கு எந்த பரிசு போட்டியும் இல்லையா?

— எம்.சோமசுந்தரம்,
தருமபுரி.

(இருபாலாரும் இப்போட்டிகளில் கலந்து கொள்ளலாம். ஆண்களுக்கு எந்த தடையும் விதிக்க வில்லையே...!)

இந்த மாத அட்டைப் படம் சரியில்லை. யோவ்... பொறுப்பாசிரியரே! இன்னும் ஏன்யா நிக்கிறே? போய் மாருதிகிட்டே சொல்லி அடுத்த இதழ் அம்சமா போடச் சொல்லு!

— எஸ்.ஏ.சதாம்,
மதுக்கூர்.

(கொஞ்சம் பொறுங்க சார்! ஏதோ பாட்டுச் சத்தம் கேட்கலே?)

அட்டைப் படத்தை பார்த்தவுடன் அழகே... அமுதே... என பாடத் தோன்றியது.

— எம்.எஸ்.கண்ணதாசன்,
ஆண்டியூர்.

நூறு ரூபாய் பரிசு பெற்றவர் யார் என்பதைத் தேடித் தேடி கண்வலி ஏற்பட்டதுதான் மிச்சம்.

— எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப் பட்டி.

(தவறுக்கு வருந்துகிறோம். பரிசு பெற்றவர் என்.கிரீஷ்குமார், வெள்ளங்கோடு)

உஷா ஜானின் - மிருதுவான சிறுகதையின் முடிவில் விழிகள் ஈரமானது!

— திருச்சி சையது,
திருச்சி.

# ஹாட்டருக்கு...



முஸ்லிம் மத சட்டப்படி... கணவன் இறந்தபின் மனைவி 3 மாதம் 10 நாட்கள் 'இத்தா' (மறைவில்) இருக்க வேண்டும். பெண்கள் ரத்த சம்பந்தமுடைய ஆடவர்கள் தவிர, பிற ஆண்கள் அவரை பார்க்கக் கூடாது. ஆனால், 'ஒரு பூ உதிரும்' அக்பர்பாஷா இறந்த பின் ஆயிஷா பேகம் மறைவில் இருந்திருப்பார். சலீம் (கிருஷ்ணா) வளர்ப்பு மகனேயன்றி ரத்த சம்பந்தமுள்ள சொந்த மகனல்ல... நாவலில், ஆயிஷா பேகம் அவனுடன் பேசுவதாக, சாப்பிடக் கூப்பிடுவதாக வருகிறதே? விளக்கம் தருவீர்களா மேடம்?

— உடந்தையன்பன்,
உடன்குடி.

பாசம் பெரிது. அதிலும் வளர்த்த பாசம் இன்னும் பெரிது. மிகவும் நேசித்த தந்தை இறந்து போன துக்கத்திலும், சோகத்திலும், வருத்தத்திலும் இருக்கும் வளர்ப்பு மகன் சலீமை சாப்பிடக் கூப்பிட்டது ஒரு தாய் உள்ளம். குஞ்சுகள் பசித்திருப்பதைக் காணச் சகியாத பறவையின் மெல்லிய மனம். இதற்கு அந்த மதச் சட்டத்தில் இடம் உண்டா இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை. எழுத்தின் வேகத்தில், உணர்ச்சிகளின் வேகத்தில் எழுதிக் கொண்டே போனதில், தாயின் அன்பிற்கு முன் எதுவும் பெரிதில்லை என்று நினைத்தது கூடக் காரணமாக இருக்கலாம். இது தவறு என்றால் மன்னிக்க வேண்டுகிறேன் உடந்தையப்பன்.

காலையில் பள்ளிக்குச் சென்ற கிருஷ்ணா மாலை வரை வீடு திரும்பாததால் தேடுகிறார்கள். இது நடப்பது ஆக்ராவில். சென்னைக்கும் போன் போட்டு தேடுகிறார்கள் என்று உள்ளது. காலையிலிருந்து மாலைக்குள் சென்னைக்கு எப்படி வரமுடியும்?

— எஸ்.நாகராஜன்,
மேலப்பாதி.

பெற்ற பையனை விடுங்கள். ஒரு ரூபாய்க் காசு தொலைத்திருக்கிறீர்களா நீங்கள். மிகவும் அல்பம் என்றால் ஐந்து ரூபாய் என வைத்துக் கொள்ளுங்கள். எங்கெல்லாம் தேடுகிறீர்கள்? அலமாரி, துணிகளுக்கு இடையில், மடிப்புகளுக்கு அடியில், மேஜை டிராயரில், தலைகாணியின் கீழ், குளியல் அறை, பூஜை அறை, சாப்பாட்டு அறை, சமையல் அறை...

எத்தனை இடங்கள்! எத்தனை பொருட்கள்! ஒரு ஐந்து ரூபாய் காசுக்கே இப்படி அல்லாடுகிற மனம், சுமந்து பெற்ற ஐந்து வருட மகனுக்காக எப்படி அல்லாடும், அலைக்கழியும் என்று யோசித்துப் பாருங்கள். அந்த நேரத்தில் மனம் மகனை மட்டும்தான் தேடுமே தவிர லாஜிக்கைத் தேடாது.

28-2-93 தேதியிட்ட ஆனந்த விகடனில் வெளியான 'லாந்தார்க்' என்பவரைப் பற்றி உண்மைக் கதையினை படித்த பாதிப்புத்தான் 'ஒரு பூ உதிரும்' எனக் கருதுகிறேன். சரிதானே மேடம்?

— ஆர்.எம்.சங்கர்,
மாமல்லபுரம்.

28-2-93 தேதியிட்ட ஆ.வி.லாந்தார்க் படித்த போது ஒரு பூ உதிரும் பாதிக் கதை மேகலா மனோகரிடம் போய் விட்டது. வேண்டுமானால் மனோகரிடம் கேட்டுப் பாருங்கள்.

தாங்கள் எழுதும் அனைத்து கதைகளிலுமே ஏதாவது ஒரு காரணம் காட்டி ஆண்களை குறை சொல்லி... குற்றவாளியாக்கி பெண்களை உயர்த்திக் கூறுகிறீர்கள்! ஏன்? இந்த நாவலிலும் கிருஷ்ணாவின் தந்தையின் கவனிப்பைக் குற்றம் சொல்லி உள்ளீர்கள்! பதில் ப்ளீஸ்...!

— கன்னி. தங்க முருகன்,
கோட்டப்பட்டி.

நீங்க ஒன்னு சார். குறை சொல்லி குற்றவாளியாக்குகிறேன் என்கிறீர்கள். அப்படி குறை, குற்றங்களை எடுத்துச்

சொன்னாலும் இந்த ஆண்கள் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறார்களே என்று வருத்தப்படுகிறேன் நான்.

கிருஷ்ணாவின் அப்பா ஜெகதீசன் மாதிரி எத்தனை ஜெகதீசன்கள் இல்லை. ஆனால் உங்களால் ஒப்புக் கொள்ள முடியவில்லை பார்த்தீர்களா...?

இந்நாவல் மூலம் நாட்டுக்குகந்த நல்லதொரு கருத்தைச் சொன்னதற்கு பாராட்டுக்கள்! கிருஷ்ணா இந்துவாக (பிராமணன்) பிறந்து, முஸ்லிமாக வளர்ந்து, கிறிஸ்டியனை மணம் புரிய நினைப்பது அருமை. ஆனால், பெரும்பாலும் இந்துக்கள் என்றாலே பிராமணர்கள் மட்டும்தான் என்று எண்ணும்படி எழுதுவது ஏன்? ஜாதியை குறிப்பிடாமல் எழுதலாமே!

— கே.சித்ரா கிட்டுச்சாமி,
கோவை-6.

உங்க கடிதத்தோட முதல் வரி படிச்சப்போ ரொம்ப சந்தோஷமாக இருந்தது. கடைசி வரிக்கு வந்ததும் கஷ்டமாக இருந்தது. ஜாதியைக் குறிப்பிடணும்னு எழுதலை. பழக்க தோஷம் காரணம். இருபத்து நாலுமணிநேரமும் பேசற பேச்சு காரணம். மாற்றிக்கணும். மாற்றிக்கறேன்.

'ஒரு பூ உதிரும்' ஏதோ ஒரு வகையில் என் மனதை பாதித்தது. நீங்கள் எந்த அடிப்படையில் எழுதினீர்கள்? 'ஜெகதீசன்' போன்றோர்க்கு போதிக்கவா? என்னைப் போல வாசகர்களின் மனதை பாதிக்கவா?

— துரை. நாகராஜன்,
பொன்மலை.

பாதித்தால் போதும். போதனை தானாக வரும்.

உங்களின் ஒவ்வொரு நாவலிலும் உள்ள விறுவிறுப்பும், புதுமையும் இதிலும் உண்டு. என் கண்களை ஈரமாக்கி விட்டது உங்கள் நாவல். இதயத்தை தொட்டது. ஆனால் 5 வயதில் இழந்த குழந்தையை இருபத்தைந்து வயதிற்கு பிறகு ஒரே ஒரு முறை டில்லி விஜயத்தில் கண்டு பிடித்ததைதான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இதில் கவனமாய் இருந்திருக்கலாமே மேடம்?

— செம்பை. இரா.சா. கார்த்திகேயன்,
செம்பொன்னார் கோவில்.

எல்லோருமே கஜினி முகமதுக்கள் இல்லை. சிலர் அலெக்ஸாண்டர்கள். இன்னும் சிலர் ஹிட்லர்கள்.

சொல்லப் போனால் எல்லாமே விதிக்கப்பட்டதன் படிதான் நடக்கும். காற்று வீசுகிற திசையில்தான் பட்டம் பறக்கும். ஆகவே ஐந்து வயதில் காணாமற் போன குழந்தை இருபத்தைந்தாவது வயதில் கிடைக்கப்பட வேண்டும், கண்டு பிடிக்கப்பட வேண்டும் என்பதற்காகத்தான் அவர்கள் டில்லி விஜயத்தையே மேற் கொண்டார்கள் என்று ஏன் உங்களால் நினைக்க முடியவில்லை...? Be Positive I say...

என் இனிய அன்பார்ந்த வாசகர்களுக்கு,

மேகலா அலுவலகம் தவிர என் வீட்டு விலாசத்திற்கு ஏகப்பட்ட கடிதங்கள் எழுதியிருக்கிறீர்கள். என் மீது நீங்கள் கொண்டிருக்கும் மதிப்பினாலும், அன்பினாலும், என் எழுத்தின் மீது வைத்திருக்கும் மரியாதை காரணமாகவும் எழுதியிருக்கிறீர்கள். தவறுகளை சுட்டிக் காட்டி இருக்கிறீர்கள். மிகவும் தாராளமாகப் பாராட்டி இருக்கிறீர்கள். பாரி, பேகன், குமணன், அதியமானை நினைவு படுத்தியிருக்கிறீர்கள். குற்றம் குற்றமே என நக்கீரனாக நின்றிருக்கிறீர்கள். நீங்கள் வள்ளல்களானதற்கும், குறைகளைக் கண்டு பிடித்துச் சொன்னதற்கும் அடிப்படைக் காரணம் என் மீது கொண்ட அன்பு. என் எழுத்து வளையக் கூடாது என்பதில் நீங்கள் காட்டுகின்ற கவனம், அக்கறை.

பாராட்டி எழுதின, குறைகளைக் கண்டு பிடித்துச் சொன்ன உங்கள் அத்தனை பேருக்கும் என் நன்றி. புகைப்படம் கேட்ட அன்பர்களுக்கு நான் சொல்லிக் கொள்வது -

''ஒரு பூ உதிரும்'' ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலிலும் பிரசுரிக்கப்பட்டிருப்பது என் புகைப்படம் என்பதுதான்.

என்றும் அன்புடன்,
இந்துமதி

# குமரன் சில்க்ஸ்

## மேகலா

## இணைந்து வழங்கும் பரிசுத் திட்டம்



ஏராளமான வாசக வாசகிகள் கலந்து கொண்ட இப்போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று வாசகிகள். இவர்கள் ரூ.1000/- மதிப்புள்ள பட்டுப் புடவைகள் பரிசாகப் பெறுகிறார்கள்.

1. திருமதி. சுஜாமுரளி,
   சென்னை-82.
2. திருமதி. ஆர்.மேரி,
   மதுரை-18.
3. திருமதி. பிரேமா,
   சென்னை-19.

### இம்மாதப் போட்டி

திருமணமாகாத இளம் பெண்களுக்கு அற்புதமாய் ஓர் அட்வைஸ் கொடுங்களேன்...! நாலே வரியில் 'நறுக்'கென்று இருக்க வேண்டும். சிறந்த மூன்று அட்வைஸ்கள் குமரன் சில்க்ஸ் வழங்கும் ரூ.1000/- மதிப்புள்ள பட் டுப் புடவைகளை பரிசாகப் பெறும். ஒரே அட்வைஸை பலர் எழுதியிருந் தால் சிறந்த வார்த்தைப் பிரயோகத்தின் அடிப்படையில் தேர்வு நடைபெறும். தபால் அட்டையில், முகவரிப் பகுதியில் கூப்பன் ஒட்டி வரும் அட்வைஸ்கள் மட்டுமே பரிசீலிக்கப்படும். கடைசி தேதி: 31.5.93.

அட்வைஸ் போட்டி,
''மேகலா''
த.பெ.எண்: 1251,
சென்னை - 600 034.

சிறுகதை





கே.தமயந்தி

"டியர் சாந்தி...

இன்னும் எத்தனை நாட்கள் நாம் மௌனத்திலேயே காதல் கண்ணாமூச்சு ஆடுவது? நீயின்றி ஒரு மைக்ரோ விநாடியை கூட என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. என்னுடன் வாழ்க்கையை பகிர்ந்து கொள்ள விரும்பினால், நாளை காலை ஆஃபீஸுக்கு வரும்போது, எனக்கு பிடித்த பச்சைவண்ண சேலையை உடுத்திவா... புரிந்து கொள்வேன்...

நேசமுடன்,
வினோத்

கடிதத்தின் வரிகள், பசுமரத்தாணிபோல வினோத்தின் மனதில் பதிந்திருந்ததால், ஏழாவது முறையாய் அந்த வரிகளை நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

நேற்று கடிதமெழுதி, சுமதியின் மூலம் சாந்தியிடம் சேர்ப்பித்த கணத்

திலிருந்து, மனம் ஒரு நிலையி லில்லை... பல மாதங்கள் அவளுக் காக இவன் பஸ் ஸ்டாப்பை குத்தகை எடுத்ததுபோல் காத்து கிடந்ததும், இருவரும் கண்களாலேயே பேசிக் கொள்வதும் அந்த தெரு அறிந்த விஷ யம்.

இருப்பினும், இதற்கு ஒரு முடிவு காணும் பொருட்டாய், தைரி யத்தோடு லெட்டரை கொடுத்துவிட் டானே ஒழிய, மனதில் பயக்குருவி சிறகடித்துக் கொண்டேயிருந்தது.

'ஒருவேளை அவனை சாந்தி நிராகரித்துவிட்டால்...?' நினைப்பே கசந்தது.

தூரத்தில் சாந்தியை பார்த்து, இதயம் அதிகபட்ச வேகத்தில் ஓட ஆரம்பித்தது, வினோத்திற்கு.

நெருங்கி வரவர, வினோத் திற்கு தலை சுற்றி, காலுக்கடியில் பூமி நழுவுவது போலிருந்தது.

சிகப்பு கலர் சேலையில், நூறடி தூரத்தில் சாந்தி வருவதை, வெறுப் போடு பார்த்தான்.

அவனின் கடிதப்படி, அவன் காதலை ஆதரிக்கும் பட்சத்தில் அவள் பச்சை புடவையில் வரவேண் டும். ஆனால் சிகப்பு சேலையில் வரு கிறாளென்றால்...? என் காதலை நிராகரித்து விட்டாளா...? ஒரு கணம் கூட அவளை பிரிந்து வாழ முடியாது என்ற நிலையில், இவள் என்னை ஏன் உதாசீனப்படுத்தி விட்டாள்...?

நினைக்க நினைக்க மூளைப் பிர தேசத்தில் பூரான்களின் நமைச்சல் அதிகமானதுபோல் உணர்ந்தான்.

ஒரு முடிவுக்கு வந்து, சாந்தி கூப் பிடுவதை முதுகில் வாங்கி, அலட்சி யப்படுத்தி மெடிக்கல் ஷாப்பில் ''பாலிடால்'' பாட்டிலை வாங்கி எம்.ஜி.ஆர். பூங்கா நோக்கி நடந் தான்.

அபிராமி தியேட்டர் திருப்பத் தில் ''தம்பி'' என்ற குரல் தடை போட நின்று திரும்பி பார்த்தான்.

''நான்தான் தம்பி சுடலை... எங்க இவ்வளவு தூரம்...''

சட்டென்று பொய் வராமல், ஒரு நிமிடம் தடுமாறி, ''சும்மா... ஃப்ரெண்டு வீட்டுக்கு...''

''அப்படியா... எனக்கு ஒரு உதவி செய்யணுமே தம்பி...''

''சாகப்போகும் நேரத்தி லுமா...?'' மனத்திற்குள் கேள்வி கேட்டு, வேதனையாய் சிரித்தான்.

''சொல்லுங்க...''

''உங்க வீட்டுக்கு எதிர்வீட்டுல இருக்கற சாந்திப்பொண்ணு, மூணு நாளிக்கி முன்னால என்கிட்ட துணி வெளுக்க போட்டுச்சு... நேத்து நைட்டு திடீர்னு வந்து, ''பச்சைபு டவை வெளுக்காட்டியும் பர வால்ல... நாளைக்கு நான் கட்டிக்க ணும், கொடுங்கன்னுச்சு... இல் லம்மா, வெள்ளாவிலேந்து இன் னும் வரலன்னேன்... அவ்வளவு தான். ஒரே அழுகை.''

ஆச்சரியத்தின் உச்சிக்கே சென்று கொண்டிருந்தான் வினோத்.

''அதை ஒரு வழியா சமாதானப் படுத்தி, காலைல கொண்டு வந்து தர்றேன்னு சொல்லி அனுப்பி வச் சேன்... திடீர்னு காலைல மச்சினிக்கு பிரசவ வலி கண்டிருச்சு...

நான் ஆஸ்பத்திரியில இருக்க ணும்... தயவு செஞ்சு இந்தப் புட வையை அந்த பொண்ணுகிட்ட கொடுத்துடுறீங்களா...?''

''ஹிர்ரே...'' என்று கத்தி, சுட லையை தூக்கி தட்டாமாலை சுழற்றி, அந்தப் புடவையை பறித்துக் கொண்டு ஓடியவனை வியப்பால் பார்த்துக் கொண்டிருந்தான் சுடலை.

# கவிப்பூக்கள்



ஹைக்கூ

கொலைகாரனுக்கு
பாராட்டும்... பதக்கமும்...!
ராணுவ வீரன்!

— வே.கி.அமிர்தராஜ்,
ஈரோடு.



ஹைக்கூ

காமத்துப் பால் கிடைத்தது
ஆபாச சுவரொட்டி தின்ற
பசுவில்!

சுதந்திரம்

விடியும்வரை
விழித்திருந்தோம்...
விடிந்தவுடன்
உறக்கம் ஆரம்பம்!

— கார்த்திகா,
ஈரோடு.





தியாகி

மரம்
வாரி இறைத்தது
நிழலை -
வெயிலில் கருகிய படி!

— கஸ்தூரி சீனிவாசன்,
மதுக்கூர்.



## நீயேசொல்!

அன்பே,
மூட்டைப் பூச்சிகளான
உன் நினைவுகளை
அழிப்பதற்கு,
இங்கே நான்...
எனக்குள்ளே...
மூட்டைப் பூச்சி
மருந்தைத்தான்
தெளித்துக் கொள்ள
வேண்டுமா என்ன?

— ஜெயந்திகுமார்

## கண்ணீர் துளிகள்

● விழிமாலையிலிருந்து
அறுந்து விழும்
முத்து மணிகள்.

● சோகத்தின்
சுமைதாங்காமல் இதயம்
சரிந்து விழும் போது
தோள் கொடுக்கும்
விழியின் விழுதுகள்

● ஆனந்தத்தில்
அகம் மகிழும்போது
கண்கள்
கட்டும் தோரணங்கள்

● பாலைவனமான
பிரிவின் போது
பூவிழியில்
பூத்திடும் பனித்துளிகள்

● தாய்க்காக
சேய் அழும்போது
விழிமுலை சிந்திடும்
பால்துளிகள்

● நெருக்கடி
நிலைமையில்
நெஞ்சம் தவிக்கும் போது
நெஞ்சிற்கு ஒத்தடம் கொடுக்கும்
இளம் சூட்டு
வெந்நீர் துளிகள்.



— டி.எல்.சிவகுமார்,
வந்தவாசி.

# பிரசன்னா பதில்கள்



★ முறை தவறி நடக்கும் எம்.எல்.ஏ., எம்.பி.க்களை திரும்பப் பெறும் அதிகாரத்தை மக்களுக்கு வழங்கினால் எப்படி இருக்கும்?

— எம்.காளீஸ்வர்,
அருப்புக்கோட்டை.

பலர் நாட்கணக்கில்தான் பதவியிலிருப்பார்கள்... அரசுக்கு தேர்தல் நடத்துவது மட்டுமே வேலையாக இருக்கும். பதவிப் பிரமாணம் எடுக்கும் போது காட்டும் சொத்துக் கணக்கை மீறி, சேர்த்ததை எல்லாம் பறிமுதல் செய்யும் அதிகாரத்தை அரசு எடுத்துக் கொள்வது கொஞ்சம் better யோசனை.

கதை கேட்பது, கதை சொல்வது - எது உங்களுக்குப் பிடிக்கும்?

— ஏ.பிறைசாகுல்,
அதிரை.

கதை விடுவது!

நல்ல காரியங்களுக்காக பொய் சொல்வதில் தப்புண்டா?

— எம்.சிவா,
தேனி.

பொய் சொல்லி நடக்கும் காரியம் நல்ல காரியமா இருக்காது.

உங்களுடைய சின்னச் சின்ன ஆசை ஒன்று சொல்லுங்களேன்.

ஜிதேந்திரா ஆர்யா, 65 வயது கிழவர். அவரிடம் ஒரு படம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசை.

வாழ்க்கையில் மிக சந்தோஷமான நாள் திருமணநாளா? முதல் சம்பள நாளா?

— எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்.

*தன் மகளுடைய திருமணநாள்தான் எந்த மனிதனுக்கும் happiest day என்கிறார் சாமுவேல் ஜான்சன். உண்மை.*

கவலைகளை மறக்க - துறக்க ஒரு வழி சொல்லுங்கள்.

— எஸ்.ரமாதேவி,
ஓமலூர்.

*என்ன ரமா இந்த வயதில் அப்படி ஒரு கவலை. Live in a day tight compartment. நாளைப் பற்றி நினைத்துப் பார்க்காதே. கவலை உன்னை விட்டு போய்விடும்.*

இந்தித் திணிப்பு போராட்டம் அவசியமா?

— ஆர்.கிருஷ்ணவேணி,
சென்னை-15.

*என்ன போராட்டம் நடத்துவது என்று யோசித்து எதுவும் கிடைக்காததால் பழைய popular போராட்டத்தையே தொடங்கலாமே என்ற முடிவுக்கு வந்து விட்டார்கள் என்று நினைக்கிறேன். வெற்றிமாலை அதிசயத் திருடன் போன்ற படங்களை டி.வி.யில் போட்டு அறுக்கிறார்களே... அதை எதிர்த்து, குரல் கொடுக்க வேண்டும். அதை விட்டு கால் மணி நேர தமிழ் Programme குறைத்து விட்டார்களே என்று குரைத்துக் கொண்டிருக்கக் கூடாது. அர்த்த மற்ற ஆர்ப்பாட்டம். அண்டை மாநிலங்கள் எல்லாம் இந்தியால் பெற்ற பயனை ஒரு தலைமுறை தமிழ் நாட்டில் பெற முடியாமல் தடுத்து விட்டது இந்த எதிர்ப்பு உணர்வு.*

கவியரசு பட்டம் கண்ணதாசன், வாலி, வைரமுத்து இவர்களில் யாருக்குப் பொருந்தும்?

— எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

*ஒரு பட்டம் ஒருவருக்கு அளிக்கப் பட்டால், அதன் மீது மற்றொருவர் ஆசைப்படுவதே அற்பத்தனம். வாலி, வைரமுத்துவுக்கு வேறு வார்த்தைகளா கிடைக்கவில்லை...? பிறகு அவர்கள் அந்தப் பட்டத்திற்கு எப்படி தகுதியானவர்கள் ஆவார்கள்? இதென்ன கலைமா*

★ குறியிட்ட கேள்வி ரூ.100 பரிசு பெறுகிறது.

மணி, பத்மஸ்ரீ, சிரோமணி போலவா? நடிகர் திலகம் என்று காமல் வைத்துக் கொள்ளலாமா?

தண்ணீர் பஞ்சம் உங்கள் பகுதியில் உண்டா?

இல்லையே... கற்றிலும் ஆறு ஒயின் ஷாப் இருக்கிறதே...

தூங்குவதற்கு மது, மாது, தூக்க மாத்திரை - இவற்றில் எது தேவைப்படுகிறது உங்களுக்கு?

— ஆர்.சித்ரா சிவனேசன்,
கோவை-4.

இசை... கடிகாரத்தின் டிக் டிக் டிக் இசை.

எழுத்தாளர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு கட்சி ஆரம்பிச்சா?

— ச.விஜயன்,
பு.புளியம்பட்டி.

சிந்திக்கத் தெரிந்தவன் கட்சியில் சேரமாட்டான். சிந்திக்க வைப்பவன் கட்சி ஆரம்பிக்க மாட்டான்.

காதலித்து திருமணம் செய்து கொள்வது தவறா?

— சின்டரெல்லா,
வேலூர்.

யார் சொன்னது? ஆனால் எப்போது காதலிக்கத் தொடங்க வேண்டும் என்பது தான் பல இளவட்டங்களுக்குத் தெரிவதில்லை. படிக்கப் போகும் போது பஸ் ஸ்டாப்பில் பார்ப்பவனை/ளை காதலித்து விடுவதா? நிரந்தரமான தொழில்... ஒரு பெண்ணை 'நல்லபடியா



"நீ உருப்படவே மாட்டே" என்று சபிக்கப்பட்டவர்கள் பலர் சாதனையாளர்களாகத் திகழ்கிறார்களே, எப்படி?

— மலை அரசன்,
அருகந்தம்பூண்டி.

அவர்கள் எல்லாம் நம்பிக்கையான ஆறு வேலைக்காரர்களை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் - என்ன? ஏன்?

ஒப்புக் கொள்வதில்லை.

பட்டுக் கோட்டை பிரபாகரிடம் பிடித்தது என்ன?

— இல.செ.வெங்கடேஸ்வரன்,
பள்ளி கொண்டா.

சிரிப்பு மாறாத அவருடைய கவர்ச்சி முகம்.

ஈவ் டீஸிங் போல ஆடம் டீஸிங் உண்டா?

— டி.கே.சுப்பிரமணியன்,
குருப்பரங்குன்றம்

அம்மாடியோவ். இந்தப் பெண்கள் கிட்டே ஆண்கள் மாட்டி முழிக்கிறது இருக்கே - அதுதாங்க பெரிய டீஸிங். பெண்களுக்கு கிளாஸ் எடுக்கிற டீச்சரைக் கூட இந்த டீஸிங் விட்டு வைப்பதில்லை அய்யா!

கோடை எப்படி இருக்கு ஸார்? ஒரு 'ஜில்' சம்பவம் சொல்லுங்களேன் ப்ளீஸ்.

— ஸ்ரீநிவாஸ் பிரபு
சென்னை-90.

'உள்ளே-வெளியே' படத்திற்குப் போனேன். ஹவுஸ் புல் லைட் எரிந்து கொண்டிருந்தது. திரும்பலாமா, அதே காம்ப்ளக்ஸில் உள்ள hot படம் ஒன்றிற்குப் போலாமான்னு யோசனை பண்ணி நின்னுட்டிருந்தேன். திடீர்னு அழகான... சும்மா சொல்லப்படாது ஐஸ்வர்யாவை விட அழகான - ஒரு பெண் அருகே வந்து, 'ஒரு எக்ஸ்ட்ரா டிக்கெட் இருக்கு. வாங்கிக்கிறீங்களா?' என்றார். எனக்கு சில்லிட்டது. பத்து ரூபாயை நீட்டி வாங்

க' காப்பாற்றும் வருமானம் பெற்ற பிறகு காதலியுங்கள். ஆமாம் சிட்பண்டில் யாராவது மாட்டிக் கொண்டார்களா... ரகசியமா சொல்லுங்கோ மேனேஜர்!

ஸ்ரீதேவி தமிழில் நடிக்க மாட்டாரா?

ஃபாசில்வாகனன்,
நெல்லை-2.

பாக்யராஜுடன் நடிப்பதாக பேசப்பட்டது. இப்போது இல்லை. மோகன்லாலுடன் ஒரு மலையாளப் படத்தில் நடிக்கிறார்.

சென்னை வானொலி நிலையத்தில் பாடலை போட்டு, எழுதியவர் இசையமைப்பாளர் பெயரைச் சொல்வதில்லையே, ஏன்?

— டி.கவிதா - மஞ்சுளா,
காஞ்சிபுரம்.

திமிர். வேறென்ன சொல்ல. சட்டப்படி Credits கொடுத்தாக வேண்டும் என்று விவித்பாரதியில் செயல்படும் போது, இவங்க மட்டும் மே(ல்)தாவிகளாக மாறிப் பார்க்கிறார்கள். டி.வி.யில் மட்டும் என்ன வாழ்கிறதாம். ஒரு குப்பை நாடகத்தைப் போட்டு, பத்து நிமிடம் டைட்டில் போடுகிறார்கள் 'தளம் பெருக்கியவர் முனியம்மா' என்று அரைமணிநேரம் படம் போடுகிறார்கள். கதாசிரியர் - டைரக்டர் பேரைப் போடுவ எப்போது? யார்? எங்கே? எப்படி? நீங்களும் இவர்களைப் பயன்படுத்திப் பாருங்கள்.

விசுவின் 'தொடரும் நினைவுகள்' பற்றி உங்கள் கருத்தென்ன?

— பி.விஸ்வநாதன்,
திருவிழந்தூர்.

சமீபகால அவர் படங்களில் இல்லாத திரைநயம் இந்த நிகழ்ச்சியில் முழுக்க முழுக்க இருந்தது.

ஆண் - பெண் நட்பை சரியாகப் புரிந்து கொள்ளும் காலம் எப்போது வரும்?

முத்து ஆனந்த்,
தோட்டப்பாளையம்.

இந்தக் கதையெல்லாம் விடாதீங்க நண்பா... ஆணுக்கும் பெண்ணுக்கும் 'நட்பு' என்பது இயற்கையை மீறிய சொல். ஆண், பெண்ணிடத்தும் பெண், ஆணிடத்தும் நட்பை மீறிய உணர்வுகள் எழவில்லை என்றால் ஒன்று அதை அவர்கள் அடக்குகிறார்கள் (Suppress) என்று கொள்ள வேண்டும். இரண்டு அதற்கான சந்தர்ப்பங்கள் கிடைக்கவில்லை என்று சொல்ல வேண்டும். மூன்று மன இயலில் அவர்களுக்கு ஏதாவது கோளாறு இருக்க வேண்டும். அதை விட்டு இந்து மதி சமாச்சாரங்களையெல்லாம் நான் கிக் கொண்டேன் - 'தேங்க்ஸ்' சொல்லக் கூட மறந்து.

உள்ளே போனால் அவர் பக்கத்து லேயே சீட். இரண்டு பேரையும் பிரிக்கிற கை வைக்கற பலகை உடைந்து போயிருந்தது. பஸ் சீட்டில் உட்காருவது போல் தொட்டுக் கொண்டு உட்கார படம் தொடங்கியது.

படத்திலே பச்சை பச்சையான வசனங்கள். சிரிப்பதா வேண்டாமான்னு யோசித்துக் கொண்டிருந்தேன். அந்த ஐஸ்வர்யா ப்ளஸ் விழுந்து விழுந்து சிரித்த பிறகுதான் நானும் சிரிக்க ஆரம்பித்தேன். இண்டர் வெல்லில் ஐஸ் க்ரீம் வாங்கிக் கொடுத்தேன். சாப்பிடும் போது 'உள்ளே வெளியே' என்றாள். ஸ்பூன் வாய்க்குள்ளே... வெளியே போய் வருவதை சொல்லி சிரித்தாள்.

தோளை இடித்து, தொடையைத் தட்டி ரசிப்பு - இரண்டாவது பாதியில். படம் முடிந்து வெளியே வரும் போது, பைக்கில் ஏற்றிச் செல்லலாம்னு ஒரு சபலத்திலே, 'நீங்க எங்கே போகணும்?' என்றேன். 'வீட்டுக்குத்தான் ஏன்?' என்றாள். 'ட்ராப் பண்ணவா?' 'வேணாம் இதோ என் ஹஸ்பெண்ட் வந்துட்டாரு' என்று ஓடிப்போய், திரும்பி நின்ற ஒரு மாருதி 1000ல் ஏறி, நொடிப் பொழுதில் மறைந்தாள்.

# முள் முடிச்சு

## பாலகுமாரன்

மலை விளிம்பில் அந்த ஜீப் நின்று கொண்டிருந்தது. விளிம்பின் முடிவில் சரிவு. சரிவுக்குப் பிறகு ஒரு சிறிய முக்கு. முக்குதாண்டி மறுபடி சரிவு. சரிவு முடியும் இடத்தில் தார்சாலை.

பரசுராம் தார் சாலையில் நின்றபடி ஜீப்பைப் பார்த்தார். முதல் சரிவு அறுப தடி அடுத்த சரிவு நாற்பதடி. முதற் சரிவில் வண்டி இறங்கி முகட்டில் முட்டி எகிறி இரண்டாவது சரிவில் சறுக்கும்போது ஜீப் புரண்டு விடும். இருபதடியில் ஒரு முறை பரவசம். முப்பதடியில் நிமிரும். மறுபடி புரளும். தரையில் மோதி எதா வது ஆகும்.

முன் பக்கச் சக்கரம் முதல் அடி வாங்கி டாப் பாடி நசுங்கி இடது பக்க கதவு அடிப்பட்டு பிறகு மறுபடி குப்புறவோ நெட்டு குத்தலாகவோ விழும். அறுபதடியி லேயே புரண்டால்தான் நன்றாக இருக்கும்.

ஆனால் உருளத் துவங்கினால் எந்தப் பக்கம் அடிபடும். எது நசுங்கும் எப்படித் திரும்பும் என்று சொல்ல முடியாது.

கடவுளே கதி என்று பேசாது இருந்து விட வேண்டும்.

''என்ன பரசுராம் ரொம்ப யோசிக்கிறீங்க?'' தர்மராஜன் கேட்டார்.

''ஹைட்டு போறாதுண்ணே.''

''போறும் பரசுராம்.''

''போறாதுண்ணே சரிஞ்சு வண்டி விழுமே கண்டி, உருளாது. பொசுக்குன்னு போய்டும்.''

''போவாதுப்பா. இதுக்கு மேல ஹைட்டு போன லாண்டிங் இடம் சரியா இல்லை இருநூறு முன்னூறு அடி ஆழம் வண்டி போய்ட்டா வண்டி எடுக்கறதும் கஷ்டம் ஆளுக்கும் டேன்ஜர். அதும் தவிர காமிராவுக்கு வாட்டம் இருக்காது.

நாற்பத்தியேழு பேர் ஊட்டியிலிருந்து பதினேழு கிலோ மீட்டர்தாண்டி ஆள் நடமாட்டம் இல்லாத மலைச்சரிவில் குழுமியிருந்தார்கள்.

பரசுராம் முடிவிற்காக நிழலாய் உட்கார்ந்து காத்திருந்தார்கள். பரசுராம் சரி என்றால் இரண்டு காமிராக்கள் சரியான இடம் பார்த்து அமர்ந்து கொள்ளும்

தயாராகும். பரசுராம் சரி என்று சொல்ல நேரமாகும்.

நிலை தடுமாறிய ஜீப் உருண்டு விழுந்து வெடித்து சிதற வேண்டும். உருண்டு விழுகிற வரை பரசுராம் வேலை. வெடித்து சிதறுவது வேறொருவர் வேலை. இவை இரண்டு சாதாரண வேலையல்ல. உயிருக்கு ஆபத்தான வேலை.

பரசுராம் இந்த வேலைக்கு வந்து முப்பது வருடமாகிறது. ஜீப் ஜம்பர் பரசுராம் என்கிற பேர் கிடைத்து விட்டது. தனியே ஒரு மரியாதை கிடைத்து விட்டது.

''அண்ணே வாங்க, இந்தப்படத்துல மாருதி ஜம்பு நீங்கதான். கைகொடுங் கண்ணே ஜீப்பு அம்பாஸிடர் ஜம்ப் பார்த்திருக்கேன். எப்படிணே மாருதில செய் திங்க. முன்னால இடிச்சா பின்னால வளையற வண்டி அது ஒண்ணுதான் ஜம் புன்னு தெரியும். எப்படினா சமாளிச்சு ஜாக்கிரதையா லேண்ட் ஆவீங்கன்னு தெரியும். இருந்தாலும் படம் பார்க்கறப்போ ஐயோன்னு பயந்துட்டேன். மாருதி மேல போகக் கொலையே அலைகழிச்சுதுண்ணே. கரெக்டா நான் சொல்றது. தியேட்டர்ல அதுக்குன்னு கைதட்டினான். யாரு மாஸ்டரு சுப்ரமணியமா. யாரு மாஸ்டரா இருந்தா என்னா ஜம்ப்ன்னா பரசுராம்தான். நல்லா கொடுத்தாங்க ளாண்ணே பெரிய கம்பெனியாச்சே இது.''

''ஒரு ஜம்புக்கு இத்தனை என்று காசு உண்டு. அந்தக்காசு ஜம்ப்பை பொறுத்து மாறும். காசு கூடுமே தவிர குறையாது. இந்த ஜம்புக்கு ஆறாயிரம் ரூபாய் இன்னும் உயரம் போனால் எட்டாயிரம் பத்தாயிரம் வாங்கலாம். அல்லது சரியாமல் எடுத்த உடனே உருண்டால் திகைத்து மகிழ்ந்து அவர்களாகவே கூட காசு தரலாம். வெறுமே சறுக்குவது பலன் தராது. எடுத்த உடனே உருண்டால் ஷாட்டும் சரியாக அமையும் காசும் கூட கிடைக்கும்.

''என்னய்யா பார்க்கறே டைம் ஆவுதுய்யா.'' தர்மராஜன் அவசரப்படுத்தி னார்.

''நீங்க சும்மா இருங்க தர்மராஜன் அவரு உண்டான டைம் எடுத்துக்கட்டும். உசிருக்கு ஆபத்தான வேலை. அப்பறம் எதுனா தப்பாயிடுச்சுன்னா எல்லாருக்கும் கஷ்டம். ஒரு பத்து நிமிஷத்துல ரெடியாய்டுவீங்களா பரசுராம். யாரோ சமாதா னப்படுத்தினார்கள். அது சமாதானமில்லை. சமாதானம்போல் ஒரு அவசரம். சீக்கிரம் முடி என்று சொல்லாமல் சொல்கிற விதம்.

வேணும்னா டைம் எடுத்துக்கட்டும் என்று சொல்லிவிட்டு அதே வாயால் பத்து நிமிஷத்துல ரெடியாய்டுவீங்களா என்று கேட்கிற பதட்டம்.

சினிமா வேலையில் நேரம் தான் காசு. எவ்வளவு சீக்கிரமாய் படப்பிடிப்பு முடிகிறதோ அவ்வளவு சீக்கிரம் ரிலீஸ். சீக்கிரமாய் ரிலீஸ் ஆனால் வாங்கின கடனுக்கு வட்டி குறையும். லாபம் பார்க்க முடியும். ஒரு படத்தில் லாபம் பார்த்த முதலாளிதான் அடுத்த படத்தில் அதிக தைரியத்துடன் இறங்குவார். அதிக தைரி யம் என்பது அதிக முதலீடு. அதிக முதலீடு என்றால் பரசுராமனுக்கும் கூடுதல் காசு.

''போனதடவ ஆறாயிரம் கொடுத்து ஒழிச்சுட்டீங்க. சரி முதல் படம்ன்னு நானும் உட்டுட்டேன். இப்பமும் அதே ஆறாயிரம்ன்னா நியாயமா. ஆறாயிரம் ஜம்பு கூலிதான் போன தடவ உருண்டதுல நாலு நாள் ஆஸ்பத்திரில இருந்தேன். உங்காளுங்க ஒருத்தனும் எட்டிப் பார்க்கலை. ஆயிரத்து முந்நூறு செலவாச்சு. நியாயத்துக்கு கம்பெனி தரணும். நான் கேட்கலை. கை துட்டு போட்டு வைத்தி யம் செய்துகிட்டேன்.

''அடிபட்டது உடனே தெரியாது முதலாளி. வீட்டுக்குப் போனா எங்கியா வது நோவும். போய் எக்ஸ்ரே எடுத்தா தசை புரண்டுருக்கு எலும்பு நவுந்துருக்குன்

னுவாங்க. அப்ப வந்து நிக்க முடியுமா. உங்களாண்டே. நாமா செய்துக்க வேண்டியதுதான்.

''நான் ஜம்ப் முடிச்சுட்டு சாதாரணமாதான் வருவேன். ஸ்டண்ட் மேன் அழுவக்கூடாது. ஐயோ ஐயோன்னு கத்தக்கூடாது. சிரிச்சுடுவாங்க முதலாளி. எத்தினி நோவு இருந்தாலும் ஒன்றுமில்லை ஒன்றுமில்லைன்னு போயிருவோம். நான் சொல்றது புரியுதுங்களா ஆறாயிரம் கட்டாது. பனிரெண்டு பேசி பத்து கிடைத்தால் பெரிய விஷயம். எட்டு நிச்சயம் கிடைக்கும். அந்த அடுத்த எட்டாயிரத்துக்கு இப்போதே வேலை செய்ய வேண்டும். திறம்பட உருள வேண்டும். முதல் சரிவில் வெறுமே சறுக்காது சரசரவென்று சரியும்போதே உருள வேண்டும்.

அடுத்த படம் பேசும்போது இதே டைரக்டர் மறுபடி ஜீப் ஜம்ப் என்று கதை செய்ய வேண்டும். பரசுராம் என்று பெயர் ஞாபகம் வரவேண்டும்.

''அண்ணே போன படத்துல வெறுமனே உருண்டுதான் வச்சேன். இப்ப இடிச்சு எகிறணும். ஒரே ஷாட்டா வரணும். முடியுமா. முடியாதுன்னா பழைய படியே வச்சுக்கலாம். உங்களால முடியும்றது என் நம்பிக்கை இங்கிலீஷ் படம் மாதிரி வரணும்னு ஆசை.''

படத்தில் மற்ற விஷயங்கள் பாடாவதியாய் இருக்க ஸ்டன்ட் காட்சி மட்டும் இங்கிலீஷ் படம் என்று ஆசைப்படுவார்கள். மண்ணு சோறு தின்பதும் மாரியம்மன் ஆட்டமும் சுத்தி சுத்தி மரம் நடுவதும் மாறாது. ஜம்ப் மட்டும் புதுசு புதுசாய் வேண்டும் என்பார்கள்.

இந்த தடவ வண்டி உள்ள காமிரா வைக்கிறேண்ணே என்பார்கள்.

வண்டியினுள்ளே காமிரா வைத்து ஜம்ப் செய்ததேயில்லை.

செய்யணும்னு ஆசைதான். இரண்டரை லட்சம் கேமிரா. எத்தினி ஜாக்கிரதையா இருந்தாலும் உள்ள அடிபட்டுரும்னு பயப்படறாங்க. அதே காமிரா இப்ப டாப் ஆங்கிள்ல இருக்கு பரசுராம். மொத்தம் மூணு கேமிரா. ஜம்ப் பண்ணிடலாமா?'' கடைசி நேரம் மாற்றி விடுவார்கள்.

காமிரா உயர்வு. பரசுராம் தாழ்வு. பரசுராமுக்கு கைகால் உடைஞ்சா கட்டு போட்டுக்கலாம். காமிரா உடைஞ்சா. கட்டு போட முடியுமா. இம்போர்டட் காமிராப்பா. ரிஸ்க் வேணாம் என்பார்கள்.

முப்பது வருடத்தில் நிறைய வெல்லப் பேச்சு பார்த்தாகி விட்டது. எப்படி வேண்டுமானாலும் பேசட்டும். துட்டு ஊருக்கு வந்த பிறகு தரேன்யா என்று ஒத்திப் போடாது இருந்தா போறும். அனேகமாய் ஒத்திப் போட மாட்டார்கள். சிலர் சொல்வதும் உண்டு. ஆனால் இந்த கம்பெனி அப்படியில்லை. உடனே காசு கிடைக்கக் கூடிய கம்பெனி. அடுத்த முறை கூப்பிடும் கம்பெனி.

''என்ன...'' பொறுமை இழந்து மறுபடியும் தர்மா கத்தினார்.

''நான் மேல போறேன்.'' பரசுராம் சொல்லிவிட்டு நடக்கத் துவங்கியதும் தர்மராஜ் சட்டென்று அவர் கை பிடித்து நிறுத்தினார்.

''என்ன மாஸ்டர்?'' பரசுராம் திரும்பிப் பார்த்தார்.

''உனக்கு எதுனா அறிவு இருக்கா?'' ஜம்ப் பண்ற வேலைக்கு போறே.. ஒழுங்கான வார்த்தை சொல்லிட்டு போ?''

''நான் மலைக்கு மேல போறேன்னேன் மாஸ்டர்.''

''அப்படி சொல்லிட்டு போய்யா.. மேல போறேன்.. மேல போறேன்னா...'

''சரி.. அப்படி போறதாயிருந்தா யார் தடுக்க முடியும்?''

''இத பார்... நான் ஏற்கனவே டென்ஷன்ல இருக்கேன். நீ ஜம்ப் பண்ண

எழுந்து வரவரைக்கும் எனக்கு நிம்மதி இருக்காது. கொஞ்ச நேரம் உட்கார்ந்துட்டு போ.''

''இல்ல மாஸ்டர்...''

''உக்காருய்யா'' தர்மராஜன் அதட்டினார்.

மாஸ்டர் தர்மராஜுக்கு முப்பத்தைந்து வயதுதான் இருக்கும். தன்னைவிட பனிரெண்டு வயது சிறியவராயிருந்தாலும் மாஸ்டர் பேச்சை ஸ்டண்ட் ஆட்கள் மீறுவதில்லை. பிறகு ஒன்று கிடக்க ஒன்று ஆனால் ஸ்டண்ட் மாஸ்டருக்கு தான் தலைவலி, கெட்ட பெயர்.

ஜீப் உருண்டு ஒரு வேளை பரசுராம் படுகாயப்பட்டால் பல பேர் கேள்விக்கு அவர் பதில் சொல்லியாக வேண்டும்.

ஜாக்கிரதையா செய்ய வேணாமா... யார் மாஸ்டர்? என்று தான் கேள்வி வரும்.

''அந்த மாஸ்டர் ரொம்ப ரிஸ்க் எடுப்பாரு. அந்த ஆள் வேணாம்'' என்று பட உலகில் பேசப்படும்.

மாஸ்டர் தர்மாவின் முகம் சிவந்திருந்தது. பாதி பாக்கெட் பான்பராக்கை வாயில் கொட்டிக்கொண்டு அதை அரைத்து தின்கிற வேகத்தில் ஒரு டென்ஷன் தெரிந்தது. முகம் சிவந்து மிகப்பெரிய வேதனை இருப்பதைக் காட்டியது.

''என்ன மாஸ்டர் டென்ஷனா இருக்கீங்க?'' டைரக்டர் இளைஞன் பேண்ட் பாக்கெட்டில் கைவிட்ட படி அருகில் வந்தான். அவன் முகத்திலும் கவலை இருந்தது. ஜீப்பை துரத்து, துரத்து என்கிற காட்சிகளெல்லாம் எடுத்தாகி விட்டது. இனி தப்பித்துக் கொள்ள வழியே இல்லாமல் ஜீப்பை மலைச் சரிவில் உருட்டி உருண்டதிலிருந்து கதா நாயகன் எழுந்து குதித்து காட்டுக்குள் ஓடி விட வேண்டும். தப்பித்து போய்விட வேண்டும். நேற்று காட்டுக்குள் தப்பித்து போகிற காட்சியும் எடுத்தாகி விட்டது. இதை மட்டும் எடுத்து விட்டால் ஒரு ஸ்டண்ட் காட்சி முழுவதும் பூர்த்தியாகி விடும்.

''ஒண்ணுமில்ல சந்துரு. சரிஞ்சுதான் உருண்டு விழும். உருண்டுக்கிட்டே வரத்துக்கு வசதியில்லை. அந்த அறுபதடி சரியும். பிறகு அந்த முனையில மோதும். அப்பறம் தான் உருளும்.''

''ஐயோ... அது சாதாரணமா இருக்குமே.''

''சரி சந்துரு... முதல்லயே உருண்டா எங்க போய் நிக்கறது? கீழ லேண்ட் ஆறதுக்கு பதினைஞ்சடி இடம் தான் இருக்கு. அந்தக் கம்பி வேலில மோதிதான் நிக்கணும். வரவேகத்துல கம்பிவேலி பிச்சுக்கிச்சுன்னா... எகிறி அந்தண்ட போயிடுச்சுன்னா.. இன்னும் அறுபதடி பள்ளம். ஒன்னுகிடக்க ஒன்னு ஆச்சுன்னா நாம கீழ போய் கூட தூக்க முடியாது. அந்த இடம் போறதுக்கு பாதையே இல்லை.''

''உங்க இஷ்டப்படி செய்யுங்க மாஸ்டர்.'' அந்த டைரக்டர் இளைஞன் தலை குனிந்து நின்று கொண்டான்.

மாஸ்டர் சொல்வது டைரக்டருக்கு திருப்தியாக இல்லை என்பது புரிந்தது. ஆனால் அதே சமயம் இன்னொரு அறுபதடி போகட்டுமே என்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஓட்றவனைப் பத்தி கவலையில்லை. எனக்கு ரோல் ஆகணும்.. என்று யாரும் சொல்ல மாட்டார்கள்.''

''மாஸ்டர், அப்ப வேற ஒன்னு செய்வோமா.. உள்ள டம்மி வச்சு உருட்டி விட்ருவமா? மேலருந்து ஆளை விட்டு தள்ளி விட்ருவமா?''

ஆனால் அது சரியாக வராது. ஆள் ஓடி எகிறி விழுவதற்கும் நிச்சயம் வித்தியா

சம் தெரியும். தள்ளி விட்ட ஜீப் பிணம் போல விழும். எகிறலும் துள்ளலுமாய் வண்டி ஓடி முகட்டில் வளைந்து திரும்பி புல்லில் சரிந்து விழுவது கண் கொள்ளா காட்சி. தள்ளி விட்ட கைகள் ஒரு வேளை தெரிந்து விட்டால்.. அல்லது வண்டி மெதுவாகிவிட்டால் மொத்த சண்டைக் காட்சிகளும் சப்பென்று ஆகிவிடும். எல்லா வற்றையும் விட முக்கியம் பரசுராமுக்கு ஆறாயிரம் கிடைக்காது. அரை மணி வேலைக்கு ஆறாயிரம் ரூபாய் காசு பரசுராமனுக்கு எவரும் தரமாட்டார்கள். என்ன தொழில் செய்தாலும் கிடைக்காது.

அட போங்க டைரக்டரே... என்ன துட்டு குடுத்து ஊட்டிக்கு கூட்டிட்டு வந்துட்டு தள்ள வுட்றதாவது'' பரசுராம் எழுந்தான். ''அதுக்கில்லீங்க... ரிஸ்க்னு மாஸ்டர் கவலைப்படறாரேன்னு பயந்தேன்.

''ரிஸ்க்தான்... கவலை தான் பயம் தான்... கடவுள் மேல பாரத்த போட்டுட்டு செய்துருவோம்.''

''அப்ப... நான் மேல மலைக்கு போயிட்டு வரட்டுங்களா?'' பரசு ராம் கை கூப்பினான்.

பரசுராமவுடன் காசி, துரை, வினாயகம், ரவி நால்வரும் மலை மீது நடக்கத் துவங்கினார்கள். பரசுராம் மறுபடி திரும்பினான்.

''அப்ப... நான் எல்லாருக்கும் போயிட்டு வரேங்க...'' பரசுராம் மறுபடி கை கூப்பினான்.

''ஷாட் நல்ல படியா வரணும்னு எல்லாரும் கடவுள் கிட்ட வேண்டிக்கங்க.''

யூனிட் மொத்தமும் டைரக்டர் உள்பட கைகூப்பியது. தர்மா இன்னொரு கொத்து பான்பராக் போட்டுக் கொண்டார்.

இந்த இடம் தான் ஜம்ப் என்று தீர்மானம் ஆனதால் கேமராக்கள் நகர்ந்து கோணம் எடுத்துக் கொண்டேன். தொலைவாக ஒரு கேமராவும், ஜீப் அசைவை ஒட்டியே திரும்பும் கேமராவும் வைக்கப்பட்டன.

உச்சிக்கு போனதும் பரசுராம் ஜீப்பை தடவிக் கொடுத்தான். பரசுராமுடைய நெஞ்சு பேட், முதுகு பேட், அடி வயிற்றுப் பேட் முழங்கால், கணுக்கால் பேட், தோள்பட்டை ஸ்பாஞ்ச், முழங்கை ஸ்பாஞ்ச் எல்லாம் சரி பார்க்கப்பட்டன. பரசுராம் வண்டியில் ஏறி உட்கார்ந்தான். வெர்ங் கியருக்கு மாற்றி வண்டியை வேகமாக திருப்பி வந்தான். மலை உச்சியிலுள்ள கேமராவும் தயார் என்று கர்சீப் ஆட்டியது. பரசுராம் ஜீப் விட்டு கீழிறங்கினான். வானம் பார்த்தான். நிலம் தொட்டான். விரல் அளவு மண் எடுத்து நெற்றியில் வைத்துக் கொண்டான். வண்டிக்கு எலுமிச்சம்பழம் சுற்றினார்கள். தரையில் போட்டு நசுக்கி பலி கொடுத்தார்கள். அப்படி பலி கொடுக்கும்போது மேலே கீழே இருக்கிற எல்லா ஸ்டண்ட் ஆட்களும் கை கூப்பினார்கள்.

பரசுராம் மலை விளிம்புக்கு வந்தான் கீழே இருக்கிற யூனிட்டைப் பார்த்து கை கூப்பினான். ''அப்ப நான் எல்லோருக்கும் போயிட்டு வரேங்க'' மறுபடி கூவினான் மலை எதிரொலித்தது.

''அங்கேருந்தா குதிக்கப் போறாங்க..'' வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த விமலா நகம் கடித்தாள்.

''ஆமா.. ஜீப் ஒட்டியாந்து அதே வேகத்துல கீழே இறங்குவாங்க. அங்க நின்னா அடிபடும். இங்க வந்துரு'' விமலாவுக்கு அருகில் இருந்த மணிவண்ணன் அவள் புஜத்தைப் பற்றி தன் பக்கம் இழுத்துக் கொண்டான்.

விமலாவுக்கு அது பிடிக்கவில்லை. ஆனாலும் ஏதோ ஒரு பயத்தில் அப் போது மறுக்க முடியவில்லை.

மணிவண்ணன் அவளிடம் இரண்டு முறை ஐ லவ் யூ சொல்லியிருக்கிறான். முதல் முறை சொன்னபோது அவள் பயந்து போனாள். அவள் முகமாற்றத்தைப் பார்த்துவிட்டு பின் வாங்கினான். தப்பா இருந்தா மன்னிச்சிரு, விமலா'' என்றான். விமலா வாய் வார்த்தையாய் மன்னிப்பு தரவில்லை. மனசுக்குள் சரி போனாப் போறது விட்டுரலாம். பெரிசுபடுத்த வேண்டாம் என்று சொல்லிக் கொண்டாள். ஆனால் மூன்று வாரம் கழித்து மணிவண்ணன் ஐ லவ் யூ, சொன்னான்.

''என்னாத்துக்கு மணிவண்ணன் இந்த கெட்ட பேச்செல்லாம். நாம சும்மா தெரிஞ்சவங்களா இருந்துடலாமே என்று சொன்னாள்.

சிநேகிதர்களாக இருந்து விடலாமே என்று சொல்லத்தான் ஆசைப்பட்டாள். ஆனால் சிநேகிதம் என்கிற வார்த்தையை இவனிடம் சொன்னால்கூட தப்பாக எடுத்துக் கொள்வான் என்கிற பயம் இருந்தது. தெரிஞ்சவங்களாக என்கிற வார்த்தை சௌகர்யமாக இருந்தது.

''தெரிஞ்சவங்களா...ன்னா எனக்கு புரியலையே'' மணிவண்ணன் கேள்வியில் ஒரு கடுப்பு இருந்தது.

''நீங்க எங்கப்பாவுக்கு தெரிஞ்சவங்க. எங்கம்மாவுக்கு தெரிஞ்சவங்க.. என்னுடைய தம்பி, தங்கச்சி, இந்த தெரு எல்லாத்துக்கும் தெரிஞ்சவங்க. இந்த ஊட்டில உங்களுக்கு எல்லாரையும் தெரியும். உங்களை எனக்குத் தெரியும். அவ்வளவுதான். இதுல ஐ லவ் யூ என்னாத்துக்கு.'' ஆனால் உள்ளூர மணிவண்ணன் ஐ லவ் யூ சொன்னது தனக்கு பிடித்திருக்கிறதோ என்கிற சந்தேகம் அவளுக்கு இருந்தது. ஐ லவ் யூ என்பது அவ்வளவு மோசமான வார்த்தை அல்ல. அதில் ஒரு மரியாதை, மதிப்பு எல்லாம் இருக்கிறது. ஆனால் எவ்வளவு தூரம் உண்மை என்பதில் தான் சந்தேகம்.

ஆனால் ரங்கசாமி ஐ லவ் யூ வெல்லாம் சொல்வதில்லை. ''சரியான காட்டுப் பன்னிடீ நீ கம்ப்யூட்டர் எழுநூத்தி அறுவத்தி ஆறு ரூவா காட்டுது. நீ எழுநூத்தம் பது தான் கணக்குன்ற. பதினாறு ரூபா எங்க போச்சு? சும்மா பசங்களோட உக்காந்து பேசிட்டிருக்கியே தவிர வேலைல கவனம் இல்லை. திரும்பு'' ரங்கசாமி அவளை அதட்டி திரும்ப வைத்தான்.

ஜாக்கெட்டுக்குக் கீழே பிராவின் பட்டை நகர்ந்து விட்டது போலும். விரலை வைத்து அழுத்தி இதை உள்ளே போட்டு தொலை என்று கத்தினான். ரங்கசாமி கத்தினால் கேட்டுக் கொள்ள வேண்டி இருந்தது.

அவள் வேலை செய்யற எஸ்.டி.டி. பூத்துக்கு ரங்கசாமி தான் ஓனர். டெலிபோன் இலாகாவில் வேலை செய்து கொண்டே ஊட்டியில் நாலு டெலிபோன் பூத் யார் யார் பேரிலோ ரங்கசாமி எடுத்திருக்கிறான் மிகச் சரியான இடங்களிலெல்லாம் அவன் பூத் செயல்படுகின்றன. இரண்டு பூத்தை சொந்தக்காரர்களுக்கே லீஸுக்கு விட்டிருக்கிறான். இன்னொரு பூத்தில் அண்ணியை உட்கார வைத்திருக்கிறான். வேலை தேடிக் கொண்டிருந்த இவளைக் கூப்பிட்டு மாதம் ஐநூறு தருகிறேன் எம் பூத்தை கவனிச்சுக்கோ என்று சொன்னான். ஐநூறு விமலாவுக்கு பெரிய தொகை. அதை அவள் வீட்டுக்கு தர வேண்டாம் என்றாலும் அவள் செலவுக்காக அந்த ஐநூறு ரூபாய் தேவையாக இருந்தது. வேலை தேடி ஸ்நோ போடவோ, சோப்பு சீப்பு வாங்கவோ, புடவைச் சீட்டுகட்டவோ... அந்தக் காசு தேவையாக இருந்தது.

முதல் தேதியன்று வீட்டுக்கு கிளம்பும்போது ஐநூறு ரூபாய் ரங்கசாமி கொடுத்து விடுவான். ஆனால் மரியாதைதான் இல்லை. ரங்கசாமியின் கண்களில் எப்போதும் ஒரு கோபம் இருந்தது. இடை விடாத காசாசை இருந்தது.

ஒரு முறை பதினாறு ரூபாய் ஒரு ஒரு எஸ்டேட் மேனேஜர் கடன் சொல்லி விட்டு போனான் என்று சொன்னதும் ஐயோ அவனா என்று தலையிலடித்துக் கொண்டான்.

அடுத்த தடவை வந்தா ஒயரைப் பிடுங்கி விட்டுட்டு டெலிபோன் வேலை செய்யலைன்னு சொல்லிடு. புகார் குடுத்திருக்கேன். அஞ்சு நிமிஷத்துல வந்து டும்னு உக்கார வை. நாலு வாட்டி இப்படி செய்தா வரமாட்டான்.

''எதுனா சண்டையா அந்த மேனேஜரோட?'' விமலா கேட்டாள்.

''அதெல்லாம் ஒன்னுமில்லை. அவன் எஸ்டேட்லருந்து பழைய பாறாங்கல் எடுத்தாந்தேன். அதுக்கு இருநூறு ரூபாய் தரணும். அதை எப்படியும் வாங்க லாம்னு இப்படி ட்ரை பண்றான் போலருக்கு.''

எப்பவோ விழுந்த செவுரோட கல்லு அது. அதுக்கு இருநூறு ரூபாயாம்.

''நான் தர மாதிரி இல்லை. அவனுக்கு தெரியாத ஒயரை அறுத்துட்டு அவன் போன பிறகு மாட்டிக்க.''

''ரொம்ப நேரம் உக்காந்துருந்தா?''

''வீட்டுக்கு போறேன்னு கதவைப் பூட்டிட்டு கௌம்பிடு. ஆனால் அதற்குப் பிறகு மேனேஜர் வரவில்லை.

மணிவண்ணன் சினிமா ஷூட்டிங் என்று சொன்னதும் விமலா பூத்தை பூட்டிக் கொண்டு கிளம்பி விட்டாள்.

ஊட்டியில் ஷூட்டிங் நடப்பது ஒன்றும் புதியதல்ல. அநேகமாய் ஊட்டியில் டான்ஸ் ஷூட்டிங்தான் நடக்கும். விமலா ஆறே ஷூட்டிங் பாத்திருக்கிறாள். ஆனால் இதுவரை ஜீப் ஜம்ப் பார்த்ததில்லை.

''போறபோது பேசிக்கிட்டாங்க. நீ போன உடனயே ஜீப் ஜம்ப் தான்னு சொன்னாங்க. நேத்திக்கு நாலு மோட்டார் சைக்கிள் ஜம்ப் எடுத்தாங்க. நாலு மோட்டார் சைக்கிளும் செம ஸ்பீட்ல வந்து பலகையில ஏறி முப்பதடி உயரத்துல பறந்து ஆள் தனியா மோட்டார் சைக்கிள் தனியா பிரிஞ்சு அட்டைப் பொட்டில குதிச்சாங்க.''

''அது ஏன் அட்டைப் பொட்டின்னு தெரியலை.''

''அதுல ஒரு ஆள் நெட்டுக்குத்தலா அட்டைப் பெட்டில விழுந்துட்டான். டபக்னு உள்ள போய் தூக்கிட்டு வந்தாங்க. நல்ல வேளை ஒன்னும் ஆகலை.

''ஜீப்பும் அட்டைப் பெட்டில விழுமா?''

''தெரியலை. போய் பார்க்கணும்.''

''போப் போறியா?''

''ஜீப் ஜம்ப் பார்த்தாகணும்.''

''எங்க அது?''

''கோர்ட் தோட்டம் கிட்டக்க. கேதிலருந்து கீழே இறங்கி போகணும்.''

''எப்பப் போகப் போற.''

''ஏன்? நீ வரியா?''

''ஜீப் ஜம்ப் நல்லாருக்குமில்ல. உருண்டு உருண்டு விழுமாம். நான் வரட்டா.. என்னைக் கூட்டிட்டுப் போறியா?

பூத்தை பூட்டிக் கொண்டு ஊட்டியில் பஸ் பிடித்து கேத்தியில் இறங்கி இரண்டரை கிலோ மீட்டர் நடந்து வழி நெடுக மணிவண்ணன் பல சினிமா ஷூட்டிங்குகள் பற்றி சொல்லிக் கொண்டு வந்தான். அநேகமாய் ஊட்டியில் நடந்த எல்லா

ஷுட்டிங்குகளும் பார்த்திருப்பதாய் சொன்னான்

மணிவண்ணனை மிக மோசமானவன் என்று சொல்ல முடியாது. ஆனால் எல்லா ஆண்களுக்கும் தனியே ஒரு பெண்ணோடு பேசினால் உடனே ஐ லவ் யூ என்று சொல்ல தோன்றுகிறது. இத்தனைக்கும் மணிவண்ணன் அப்பாவுக்கு நன்கு தெரிந்தவன். வீட்டுக்கு வந்து போகிறவன்.

''மணி அண்ணன் வந்துது பாரு'' மணிவண்ணன் என்று எல்லோரும் கூப்பிட்டாலும் தங்கை அவனை மணி அண்ணன் என்று தான் கூப்பிடுவாள். அப்போதெல்லாம் சும்மா இருந்து விட்டு தான் தனியாக இருக்கும் போது எப்படி ஐ லவ் யூ என்று சொன்னார் என்பது புரியவில்லை.

ஆனால் இரண்டாவது முறை மறுத்த பிறகு மணிவண்ணன் வெட்கப்படவில்லை. அதே சமயம் மன்னிப்பும் கேட்கவில்லை. ஐ லவ் யூ என்று சொல்வது என் பிறப்புரிமை என்பது போல் சொல்லிவிட்டு மறுத்ததும் பேசாமல் இருந்து விட்டான்.

மறுத்தபோது அதெல்லாம் தெரியாது என்று சொல்லியிருக்கலாம் என்று ஒரு நம்பிக்கை வந்திருக்கும். மறுப்பை ஏற்றுக் கொண்ட போது தான் அவநம்பிக்கை வந்தது. அதே சமயம் இவன் கெட்டவன் இல்லை என்றும் தோன்றியது. ரெண்டரை கிலோ மீட்டர் அவனோடு தனியாக நடந்த போது மறுபடியும் அவன் சொன்னாலும் சொல்லலாம் என்று எதிர் பார்த்தாள் சொல்லுகிற விதத்துக்கு தகுந்தபடி நடந்து கொள்ளலாம் என்று தீர்மானித்தாள்.

அநேகமாய் இப்போது அவன் சொல்லுவான் என்று நினைத்தபொழுது ஷுட்டிங் நடக்கிற இடம் வந்து விட்டது. மலைச்சரிவில் நூறு பேருக்கு மேல் கூட்டம் இருந்தது. ரொம்ப உயரமான இடத்தில் ஜீப் இருந்தது.

அப்ப எல்லாருக்கும் போயிட்டு வரேங்க என்று அந்த ஆள் கை கூப்பிய போது பயம் வந்தது. அந்த பயம் நகம் கடிக்க வைத்தது. இந்த பயத்தை பார்த்து விட்டுத்தான் தைரியமூட்டுகிற செயலாய் மணிவண்ணன் தன் புஜத்தைப் பிடித்து இழுத்திருக்க வேண்டும் இப்படி நின்னுக்க என்று தன் பக்கம் இழுத்திருக்க வேண்டும். மணிவண்ணன் மிக நெருக்கமாய் நிற்பது விமலாவுக்கு தெரிந்தது. ஆனால் நகர்ந்து கொள்ள அதிக இடம் இல்லை. அதும் தவிர இந்த இடத்தை விட்டு நகர்ந்தால் வேறு யாராவது முண்டியடித்துக் கொண்டு வந்து விடுவார்கள். பிறகு பின் பக்கத்திலிருந்து ஜீப் தாவலை பார்க்க வேண்டியிருக்கும். இவ்வளவு தூரம் வந்தது வீணாகி விடும். ஜீப் வேகமாக வந்து கிறீச் என்று ப்ரேக் போட்டது. விமலா பயத்தில் கண் பொத்திக் கொண்டாள். கொஞ்சம் ஆடினாள். மணிவண்ணன் அவன் தோளைப் பிடித்துக் கொண்டான். ஆனால் ஜீப் தாவவில்லை விளிம்பில் நின்றுவிட்டு மறுபடி பின்னால் போயிற்று.

''அவ்வளவுதானா?'' விமலா ஆவலோடு கேட்டாள்.

''இல்லை இல்லை... இன்னும் இருக்கு மணிவண்ணன் அவள் தோள் மீது கை எடுக்காமல் சொன்னாள். பரசுராம் ஜீப்பை விட்டு கீழே இறங்கினான்.

''டைரக்டர் சார் ஒரு அஞ்சு நிமிஷம் தயவு செய்து அஞ்சு நிமிஷம்...'' கை கூப்பி வாங்கினான்.

''டேக் யுவர் ஓன் டைம்' கீழே இருந்து டைரக்டர் கத்த ஜனக் கூட்டம் சலசலத்தது. விமலா தோள் குலுக்கி மணிவண்ணன் கையை உதறினாள். மணிவண்ணன் கையை பாக்கெட்டில் போட்டுக் கொண்டான்.

''அதான பார்த்தேன்... என்னடா நல்ல பொண்ணாச்சே அது... தேவையில்லாத யார் கூடயோ ஜதை போட்டுட்டு வருதேன்னு பார்த்தேன். ஷுட்டிங் பார்க்க

கூட்டிட்டு வந்துட்டு நேக்கா தோள்ள கை போடறாங்கப்பா'' வின்சென்ட் குரலில் கோபம் கொப்பளித்தது.

''என்னடா சொல்ற...?'' ஆவலோடு ஜீப் ஜம்ப்பை பார்த்துக் கொண்டிருந்த பாலசுப்ரமணியம் திரும்பி வின்சென்ட்டின் முகம் பார்த்தான்.

இதோ குதிக்கப் போகிறான் என்று நினைத்துக் கொண்டிருந்த நேரத்தில் ஜீப் விளிம்பில் வந்து நின்றது ஏமாற்றமாய் இருந்தது.

கதாநாயகனுக்காக வேறு யாரோ டுப் போட்டு ஜீப் ஓட்டுவது அவனுக்கு தெரிந்திருந்தாலும் கண் எதிரே ஒரு மனிதன் ஜீப் ஓட்டி விழப் போகிறான் என்று தெரிந்தபோது ஓட்டுகிறவன் மீது மதிப்பும் மரியாதையும் அதிகமாயிற்று.

அப்ப எல்லாருக்கும் போயிட்டு வரேங்க என்று அந்த ஆள் கத்திய போது கையெடுத்து கும்பிட்டபோது பாலசுப்ரமணியமும் கும்பிட்டான். கும்பிட்ட போது வின்சென்ட்டும் கும்பிடுகிறானா என்று திரும்பிப் பார்த்தான். வின் சென்ட் கும்பிடவில்லை. வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். வின்சென்ட்டும் அவனும் ஆறு வருட நண்பர்கள். முதல் முதலாய் ஊட்டியில் வந்து வேலை ஏற்றபோது ஆபீஸுக்கு கிளம்புகிறபோது நாலு வீடு தள்ளியிருந்த வின்சென்ட் லேசாய் சிரித்தான். தன்னை வலிய வந்து அறிமுகப்படுத்திக் கொண்டான்.

நண்பர்களாகி இரண்டு மாதம் கழித்து அதெப்படிடா டக்குன்னு வந்து, ஃப்ரெண்டாயிட்ட... என்று பாலசுப்பிரமணியம் வின்சென்ட்டைக் கேட்ட போது, ''இந்த மலைப் பக்கம் நம் ஏஜ் ஆளுங்க நாம ரெண்டு பேருதான். நம்மள மாதிரி ஆபீஸ் போறவங்க நாம ரெண்டு பேரும் தான். இதுக்கு முன்னாடி குதிரை ஓட்டற பசங்க தான் எனக்கு ப்ரெண்ட். பேசறதுக்கு வேற ஆள் இல்லாததால் அவங்களோட பேசிக்கிட்டிருப்பேன். இப்ப நீ கிடைச்ச பிறகு அவங்களோட பேசறதில்லை. எத்தனை நேரம் குதிரை பத்தி பேசறது... சொல்லு.

''அந்த சம்பங்கியோட பேசற...''

''அவன் கடன் கேக்க வருவான். குதிரை ஓடுச்சுன்னா திருப்பி கொடுத்துரு வான்.''

''அது என்னா சம்பங்கி...? ஆம்பளைக்கு பூ பேரு வச்சு இப்பதான் பாக்க றேன்.''

''சம்பங்கி முரட்டு பூ. நெடியான வாசனை. ரெண்டு மலை தாண்டி கொஞ்சம் கிழ பெரிய சம்பங்கி தோட்டமே இருக்கு இந்த ஊர்ல நாலஞ்சு பேர் சம்பங்கின்னு பேர் வச்சு பாத்துருக்கேன்.''

வின்சென்ட்டுக்கு சம்பங்கி சிநேகிதம் என்பதால் பாலுவுக்கும் சிநேகம் ஆனான். சம்பங்கியிடம் நாலு குதிரைகள் இருந்தன. ஊட்டியில் டூரிஸ்ட்டுகளுக்கு குதிரை சவாரி ஒரு ஆனந்தம். அதிகம் கலவரப்படாத பெட்டை குதிரைகளில் யார் வேண்டுமானாலும் பத்திரமாக போக முடியும்.

''தலைவா. போட் கிளப்புக்கு வர்ற ஆளுங்கள கொஞ்சம் நம்ம குதிரை பக்கம் திருப்பி வுடுங்களேன்.'' அந்த சம்பங்கி பாலுவை பார்க்கும்போதெல்லாம் சும்மா கேட்பது வழக்கம்.

தேவையில்லாத ஒரு குதிரைக் கார இளைஞனுக்கு எதற்கு உதவி என்று பாலசுப்ரமணியத்துக்கு உள்ளே தோன்றினாலும் டேய்... இந்த டிபன் பாக்ஸை வீட்லக் கொடுத்துரு. துணிப்பை ஒன்னு வாங்கிட்டு வா. நான் மேட்னி போயிட்டு அப்படியே மார்க்கெட் போயிட்டு வீட்டுக்கு வரேன்னு சொல்லு'' டிபன் பாக்ஸ் குதிரையில் போகும். பை குதிரையில் வரும்.

''குதிரை ஓட்ட கத்துக்கங்க பாலு... ஒரு அவசரத்துக்கு டக்குன்னு வீட்டுக்கு

போயிட்டு வரலாமில்ல..'' சம்பங்கி கண் சிமிட்டுவான்.

பகல் சாப்பாட்டுக்கு குதிரையில் வீட்டுக்கு போவது நினைப்பளவில் பிடித் திருந்தாலும் செயலாக்க வெட்கமாக இருந்தது.

''இனிமே பகல் சாப்பாட்டுக்கு வூட்டுக்கு வந்துடப் போறேன். நடந்து இல்ல... குதிரைல... உனக்கு எதாவது கஷ்டம் உண்டாம்மா...'' பாலு கேட்க அம்மா தலை நிமிர்ந்தாள்.

''எனக்கென்னா கஷ்டம். இடுப்புல கத்தி வச்சுக்கிட்டு அலையாத இருந்தா சரி. ராத்திரி தலைப்பா கட்டிட்டு சுத்தாம இருந்தா சரி. ஒன்னு செய்.. லவ்டேல்ல ஒரு வாத்தியார் பொண்ணு இருக்கா. பொண்ணு பாக்க வரச் சொல்லி ரெண்டு மூணுதடவை சொல்லி வுட்டாங்க. பொண்ணுபாக்க மட்டும் நீ வேணா குதிரைல போ. அம்சமா இருக்கும். நாங்கள்ளாம் பின்னாடி கார்ல வரோம்.''

''அந்தப் பொண்ணு என்னைப் பைத்தியக்காரன்னு நினைக்கணுமா?''

''பொண்ணு நினைச்சா குத்துதாக்கும்... ஆத்தா நினைச்சா அலட்சியமா? இந்த வார்த்தை நான் சொல்லிருந்தா சும்மா இருந்துப்பியா? உங்கப்பாவுக்கப்பா குதிரைல தான கம்பு கேழ்வரகு வித்தாருன்னு சொல்லுவ.''

நீ ரோசமூட்டி பாக்கறியா என்னை.. வாத்தியார் மகளை பெண் பாக்க குதிரைல வரமாட்டேன்னு நினைக்கிறியா? நீ சொல்றதுக்காவது நான் குதிரைல போகப் போறேன். பொண்ணு பாக்க போகாட்டாலும் சும்மா குதிரைல போய் எங்கம்மா குடுக்க சொன்னாங்கன்னு ஒரு கடுதாசு குடுத்துட்டு வரேன்.''

''அடி, செருப்பால... நான் எதுக்குடா அந்தப் பொண்ணுக்கு கடுதாசு தர ணும்.''

''அந்த பொண்ணுக்கு இல்லம்மா. வாத்தியாருக்கு கடுதாசு இல்ல. அழைப் பிதழ் ஊட்டியில் கோடை விழா குதுகல ஆரம்பம். மாண்புமிகு ஸோ அண்ட் ஸோ துவக்கி வைக்கிறார். நேத்து தான் பிரிண்ட் பண்ண கொடுத்தேன். எனக்கு நாலஞ்சு கிடைக்கும். ஒன்னு வாத்தியாருக்கு வச்சிர வேண்டியது.''

''எப்படியோ அந்தப் பொண்ணை பாத்தாவணுமாக்கும் உனக்கு'' அம்மா நொடித்தாள். மெல்ல சிரித்தாள்.

''அதொன்னுமில்லை. குதிரைல போக முடியாதுன்னு சொன்னியே... அதுக் கோசரம் சொன்னேன்.

''போய் கொடுத்துட்டு வாடா. குதிரைலதான் போய் கொடுக்கணும்.

''என்கிட்ட சேலன்ஜ் பண்ணாத'' பாலு அம்மாவை எச்சரித்தான்.

''நீ, உங்கப்பா எல்லாமே வாய் சவடால் தான். உங்கப்பாவுக்கு உத்தியோ கம்னா தாசில்தார். பின்னால மலை தெரியுது... கல்லு கட்டுங்கன்னு சொல்லி காரியமே நடக்கலை.

''தேவைப்படுமடா. பின்னாடி தேவைப்படும்.''

''தப்பா சம்பாதின்னு சொல்றியா.''

''நான் ஒன்னும் சொல்லலை. உனக்கு சாமர்த்தியம் போறாதுன்னு சொல் றேன்.

''பணப்பேயே.. என் தந்தையைப் பாடுபடுத்தியது போதாதென்று என்னை யும் தொல்லை செய்கிறாயா'' பாலு வெறும் கையை வாள் பிடிப்பது போல் பிடித்து இடுப்பிலிருந்து உருவி பெற்றவளை இரண்டு கூறாய் வெட்டுவது போல் கை வீசினான்.

''போடா.. போக்கத்தவனே..'' அம்மா சமையலறைக்குள் போனாள்.

ஏழு மணிக்கு மேல் ஊட்டியில் வீட்டை விட்டு போக முடியாது. வயலும் வாழ்வும் முடிகிற வரையும் டி.வி. பார்க்க முடியாது. ஆபீஸ்லேர்ந்து வந்த பின் டி.வி. பெட்டியின் முன் உட்காரு முன் பாலுவும் அம்மாவும் எதாவது சண்டையிட்டு பிராண்டிக் கொள்வார்கள்.

பாலு அம்மா வளர்த்த பிள்ளை. நாற்பது கிலோ மீட்டர் தள்ளி ஒரு மலைச் சரிவு டவுனில் தாஸில்தாராய் இருக்கிற அப்பா முடிந்தால் தான் வீட்டுக்கு வருவார். முடியாது போனால் ஆபீஸ்லேயே தங்கி விடுவார்.

''ஏன் ஆபீஸ்ல தங்கறது? அங்கேயே எங்கனா சின்ன வீடு செட்டப் செஞ்சுக்க வேண்டியதுதானே?'' அம்மா அப்பாவையும் கேலி செய்வது வழக்கம்.

''பார்த்துக்கிட்டிருக்கேன்'' அப்பா சுடச்சுட குழம்பை சோறில் பிசைந்து சாப்பிட்டவாறே பதில் சொல்வது வழக்கம்.

அம்பத்தி மூணு வயசாச்சே... அங்க வூடு செட்டப் பண்ணிட்டு இங்க வரமுடியுமா?

''முடியாதா என்ன? வாரம் ஒரு தடவை வந்துட்டு போறேன்.''

''மாசம் ஒரு தடவை வந்தா போறும். ஒன்னாந்தேதி சம்பளத்தைக் கொண்ணாந்து கொடுத்தா போறும். அடிக்கடி வந்துட்டீங்கனா டேஞ்ஜர்.''

''என்னா டேஞ்ஜர்.''

''அது எங்கனா சின்ன வீடு செட்டப் பண்ணிக்கிச்சுன்னா... தாஸில்தார் இல்லாத போது வர போக ஆள் செட்டப் பண்ணிடுச்சுன்னா.''

''அசிங்கம் பிடிச்சவடி நீ.. அப்பா இடது கையால் தலையிலடித்துக் கொண்டார்.

நான் உலக நடப்பை சொன்னேன். கீழ போகன்வில்லா வூட்ல தினம் மூணு பேர் வரான். எல்லார் கிட்டயும் இதான் புருஷன்னு சொல்றா.''

''என்ன ஆச்சரியம். ஒரு புருஷன் வரபோது இன்னொரு புருஷன் வரதில்லை. தெரிஞ்சு வரதில்லையா தெரியாத வரதில்லையான்னு தான் தெரியலை.''

''உனக்கு வேற வேலையே இல்லையா?''

''எனக்கு என்னா வேலை சொல்லுங்க. ரெண்டு புள்ளைக்கு பொங்கிப் போடணும். அதுல பாதி வேலைக்காரி செய்துடறா. துணி துவைக்கறது பத்து தேய்க்கிறது. அவளே செய்துடறா. எத்தினி நேரம் வீடு பெருக்கறது? எத்தினி நேரம் தோட்டம் கொத்தறது? படியில உக்காந்து பாக்கறது? மழை பெஞ்சா காஞ்ச துணி எடுக்கறதுக்கு ஓடறது தவிர வேறெதும் நான் செய்யறதில்லை.

வாழ்க்கை சில பேருக்கே சுலபமாய் அமையும். சுகமாக அமைவதை ஏற்றுக் கொண்டு அனுமதிக்க ஒரு பரந்த மனம் வேண்டும். புருஷனும் பிள்ளையும் சம்பாதிக்க இன்னொரு பிள்ளை கல்லூரிக்கு போக அம்மா முக்கால் மணி நேரம் சமையல் போக வேறெந்த வேலையும் இல்லாமல் வாசற்படியில் உட்கார்ந்திருப்பாள். அல்லது வீட்டைப் பூட்டி விட்டு அல்சேஷன் நாயோடு தோட்டம் சுற்றுவாள். அப்பா வேலைக்கு வந்ததும் வாங்கிப் போட்ட தோட்டம். அம்மாவின் சீதனத்தில் நடுவே எழுப்பிய வீடு. கூடத்தில் சிம்னியும், சுற்றி கண்ணாடி ஜன்னலும் கொண்ட வீடு அது. அம்மாவின் பொழுது போக்கு மனைகளைப் பார்ப்பது மற்றவர் வீடுகளைப் பார்ப்பது. அல்லது வீட்டின் வலப்புறம் வந்துஅங்கு நாற்காலி போட்டு ஏரி பார்ப்பது... ஏரியின் மறு கோடியில் சுற்றுலா வளர்ச்சித்

துறையின் போர்ட் கிளப் இருந்தது. பாலசுப்ரமணியனுக்கு போர்ட் கிளப்பில் குமாஸ்தா வேலை. அங்கே நாலு மாதம் தான் வேலை இருக்கும். மார்ச், ஏப்ரல், மே, ஜூன் தான் நெக்கு வாங்கும். ஜூன் பதினைஞ்சுக்குப் பிறகு மழை பெய்யத் துவங்கும். ஊட்டி காலியாகும். வெறிச்சோடும் எல்லா படகுகளையும் கரையில் இழுத்துப் போட்டுவிட்டு மழையில் நனையும் ஏரியைப் பார்த்துக் கொண்டிருப்பது வழக்கம். அந்த நாலு மாச வருமானத்தையும், கணக்கு காட்டி ஒப்படைப்பது தான் மீதி மாதவேலை.

அடுத்த கோடைக்கு போர்ட் கிளப்பை தயார் செய்வது தான் மற்றொரு வேலை. இதுவும் சுகமான வேலை. பெரிய ரோதனைகள் இல்லாத வேலை. ராமேஸ்வரம் சுற்றுலா வளர்ச்சி துறையில் வேலை செய்பவன் இங்கே ஒரு முறை வந்து பார்த்து விட்டு வயிற்றிலடித்து கொண்டான். யோவ்.. ராவும், பகலும் சாகறேன்யா என்று நொந்து கொண்டான். ''ஒன்னு செய் தோழரே. ஜூன் கடைசி வாரத்துல வாங்க. பேய் மழை அடிக்கும். வந்து ரெண்டு நாள் தங்கிட்டு போங்க. வாழ்க்கை வெறுத்துரும். ஒரு நாள் ரெண்டு நாள் மழை பாக்கலாம். ரெண்டு மாசம் விடாத மழை பெஞ்சா என்னா செய்வீங்க. மழை பெரிசாகி ஒரு வாரம் பத்து நாள் கரெண்ட் இருக்காது. எப்படி இருப்பீங்க? லைட் கிடையாது. டி.வி. கிடையாது. ஆறு மணிக்கு வீட்டுக்கு போனா விடியற வரைக்கும் ஒன்னும் செய்ய முடியாது. சினிமா, டிராமா கிடையாது. பொழுது போகணும்னா மழையில நடக்கணும். இன்னிக்கு ஞாயித்து கிழமையா, திங்கக் கிழமையா, சனிக்கிழமையா... ஒன்னும் தெரியாது. வரீங்களா?''

''ஐயோ எனக்கு பைத்தியம் புடிச்சிருமே'' ராமேஸ்வரம் பின் வாங்கினான். ஆனால் அதே ராமேஸ்வரத்துக்கு பாலசுப்ரமண்யம் போனபோது அரை மணி கூட தங்க முடியவில்லை. சுற்றி சுற்றி ஈக்கள் பறப்பது தாங்க முடியவில்லை.

ஊட்டி சுத்தமான இடம். அமைதியான இடம். தனிமையான இடம் இந்தத் தனிமை பழகப் பழக பிடித்து போய் விடும். எப்போதாவது மனசு பரபரப்புக்கு ஆசைப்படுகிறபோது ஆபீஸுக்கு லீவு போட்டு விட்டு ஷூட்டிங் பார்க்கத் தோன்றும். ஷூட்டிங் அலுப்பான விஷயம் தான். ஆனால் அந்த மனிதர்கள் சுவாரசியமானவர்கள். இங்கே இந்த ஷூட்டிங்கும் சுவாரஸ்யமாக இருக்கிறது. இந்த ஜீப் எப்படி உருளும் என்று தெரியவில்லை. எப்போது உருளும் என்று தெரியவில்லை. எல்லோரும் கவலையாய் இருப்பதைப் பார்த்தான். ஏதோ விபரீதம் நடக்க வாய்ப்பிருப்பது போல் தோன்றியது.

இந்த நேரத்தில் இந்த ஜீப் தாவலை விட சுவாரசியமாய் வின்சென்ட் ஏதோ கண்டு பிடித்து விட்டான். எதிர்ப்புறம் இருக்கிற நீலப்புடவை பெண்ணையே உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

''யார் வின்சென்ட் அது?''

''விமலா''

''எங்கித்து பொண்ணு?''

''ஊட்டிதான் உங்க ஆபீஸ் எதிர்க்க... பூத்ல இருக்கு.''

பூத்தை ஞாபகப்படுத்திக் கொள்ள முடிந்தது. இந்தப் பெண்ணைப் பார்த்ததாய் ஞாபகமில்லை.

''என்னமோ கை போடறான்னு சொன்னே...''

''மாட்டுத் தீவனம் விக்கிறவன். லேக் நர்ஸரி பக்கத்துல கடை போட்டிருக்கிறவன் இந்தப் பொண்ணை கணக்கு பண்றான் போல இருக்கு. தோள்ல கை போட்டான். சட்டுன்னு அந்தப் பொண்ணு உதறிடுச்சு.

''ஏதோ செய்து ஒழியட்டும். உனக்கு என்னா?''

''அப்படி சொல்லாத பாலு அது கொஞ்சம் நல்ல பொண்ணு. நிறைய கதை புஸ்தகம் படிக்கும். இந்தப் பையன் கோயான். தேவையில்லாத அதை ரப்ச்சர் பண்றான்.''

''யாரோ யாரையோ எதோ செய்துட்டு போறாங்க. நமக்கு ஏன்...?''

'எதோ டூரிஸ்ட் கேலி பண்ணா சரி ஒழியட்டும்னு வுட்டுடலாம். நம்மூர் பொண்ணை நம்ம ஊர் பையன் கலாட்டா பண்ணா டூரிஸ்ட்டுக்கு இளக்காரமாயிடுமில்ல? வெளியூர் ஆள் நூறு பேர் இருக்கும் போது இப்படி செய்தா வெளியூர் ஆளுக்கு சீப்பா போயிடாதா?

ஊட்டியில் இது ஒரு விசேஷம். வெளியூர் ஆட்களை ஊட்டியிலிருப்பவர்கள் அதிகம் நெருங்க மாட்டார்கள். வெளியூர் ஆட்களையும் கலக்க விட மாட்டார்கள்.

உள்ளூர் பெண்ணை வெளியூர் ஆட்கள் கேலிசெய்தால் கட்டுக்கோப்பாய் எதிர்ப்பார்கள். ரெண்டு நாள் தங்கி விட்டு போகிறவன் சொந்த வாழ்க்கையில் கால் வைத்து போகாமல் கவனித்துக் கொள்வார்கள். அதே சமயம் டூரிஸ்ட்டை பகைத்துக் கொள்ளவும் மாட்டார்கள். டூரிஸ்ட்டிடம் வாலாட்டுகிற உள்ளூர்க்காரர்களைக் கண்டிக்காமல் விடமாட்டார்கள்.

ஊட்டி என்கிறமலைப் பிரதேசத்திற்கு டூரிஸ்ட்டால் தான் காசு. டூரிஸ்ட்டால் தான் மதிப்பு. இந்த ஊருக்கு மரியாதை கிடைப்பதே டூரிஸ்ட்டால் தான் அந்த நாலுமாசக் காசுதான் ஊட்டியின் பொருளாதாரம்.

அறிவித்து மூன்று படகுகள் கரையில் குப்புற போடப்பட்டிருக்கிற ஒன்பது மாத சோகம். பாலுவுக்கு தெரியும். அதே போட்டுக்கு ஒரு மணி நேரம் வெய்யிலில் காத்திருக்கற கூட்டமும் தெரியும். ஊட்டி மலை ஒரு ராட்சஸன். கும்பகர்ணன். ஒன்பது மாத தூக்கம், மூன்று மாத ஓட்டம் அதற்கு வழக்கம். பல நூற்றாண்டு காலப் பழக்கம். இந்த சீஸனில் முதல் ஷூட்டிங் இதுதான். அதனாலேயே உள்ளூர் கூட்டம் அதிகமாக வந்திருக்கிறது.

ஒரு வேளை ஜீப் ஜம்ப் என்று கேள்விப்பட்டு சற்று கூடுதலாக வந்திருக்கலாம். ''அட... குதிங்கப்பா கிழங்கு புடுங்க போவணும். நானும் ஒன்னவரா நிக்கறேன். அசைய மாட்டேன்றீங்களே.''லோக்கல் ஆள் அலுத்துக் கொண்டார். சுற்றியுள்ளோர் சிரித்தார்கள்.

அட சும்மா இரு. அவங்களுக்கு கேக்கப்போவுது என்று அதட்டினார்கள். டூரிஸ்ட்டை கேலி பண்ண ஊட்டி மக்கள் விரும்புவதேயில்லை.

பரசுராம் வண்டியைச் சுற்றிக் கொண்டு போய் கதவு திறந்து உள்ளே ஏறினான். மறுபடி முழு வேகத்தில் பின்னடைந்தான். பரசு ராம் தயார் என்று சொன்னதும் அவனுடன் போனவர்கள் கர்ச்சீப்பால் மூணு கேமிராவுக்கும் இயங்கச் சொல்லி சைகை செய்திருந்தார்கள். அங்கங்கே உள்ள புதரில் அழுந்த உட்கார்ந்து கொண்டார்கள். ஆள் தெரியாமலிருக்க மறைந்து கொண்டார்கள் ஜீப் நின்ற வண்ணம் சீறியது. கியர் மாற்றினான். ஜீப் முன்னேறியது. விளிம்பில் வேகமாக திரும்பி சரிவில் நெட்டுக் குத்தலாய் இறங்கியது. இறங்கும்போதே புரண்டது. புரண்டு புரண்டு மலைமுகட்டில் முட்டியது. ஜீப்பின் மேல் பகுதி மலையில் இடித்ததும் இடித்த வேகத்தில் ஜீப் அந்தரத்தில் எழுந்தது. அடுத்த சரிவில் உருண்டது. இந்த முறை நாலு உருளல், ஐந்தாவது உருளலில் ஆமை போல மல்லாந்தபடிக்கு மலையைச் சுற்றிப் போகும் தெருவுக்கு வந்தது. தரையோடு தேய்ந்து சரிந்த வேகத்தில் முள் வேலியை நோக்கி போயிற்று. முள் வேலியின் நடுப் பகுதியில்

மோதி தன் மொத்த கனத்தையும் அடுத்த பக்கம் சாய்த்தது. ஜீப்பின் வேகமும், கனமும் தாங்காமல் முள் வேலி ;நின்று நிதானமாய் தாழ்ந்தது.

''யாரும் போவாதீங்க.. யாரும் போவாதீங்க..'' யாரோ கத்தினார்கள். பட்டு பட்டு என்று முள் கம்பிகள் அறுந்தன. ஜீப் புரண்டு டயர் பக்கம் சரிவில் தொட்டது. மறுபடி சறுக்கிற்று. முழு வேகத்தில் அடுத்த அறுவது அடியை நோக்கி உருண்டது. இந்த முறை ஆறு உருளல்.

''குருநாதா... குருநாதா...'' யாரோ கத்தினார்கள். ஜீப்பை நோக்கி ஓடத் தலைப்பட்ட ஒரு அஸிஸ்டென்ட் டைரக்டரை குருநாதா என்று கத்திய அஸோஸியேட் டைரக்டர் இழுத்து விலக்கினான். ஜீப் பயங்கர சப்தத்துடன் பக்கம் போய் தரை தொட்டது. மெல்ல மல்லாக்க விழுந்தது. ஓட்டினவனுக்கு சாவு நிச்சயம் என்று எல்லோருக்கும் நிச்சயமாகத் தோன்றியது. இதற்கு மேல் ஜீப் அசையாது என்று தெரிய ஸ்டண்ட் மாஸ்டர் தர்மா கட் என்று கத்தினார். முள் வேலியைத் தாண்டி சரிவில் பிருஷ்டம் பட உட்கார்ந்து சறுக்கிக் கொண்டு ஜீப்பை நோக்கி போனார். கூட்டம் திகைப்பிலிருந்து விடுபட்டு கை தட்டியது. தர்மாவின் உதவியாளர்கள் தர்மாவை விட வேகமாக சறுக்கி ஜீப்பை நோக்கி நகர்ந்தார்கள். முதலில் ஜீப்பை நெருங்கிய ரவி ''பரசுராமண்ணே, பரசுராமண்ணே என்று கத்தினான். மல்லாக்கக் கிடந்த ஜீப்பின் கதவு பிடித்து இழுத்தான். ஜீப்பிலிருந்து மெல்ல பரசுராம் வெளியே வந்தார். ஹெல்மெட்டைக் கழற்றினான். இடது கையில் ஹெல்மெட்டை வைத்தபடி வலது கையால் கூட்டம் நோக்கி கையாட்டினான். கூட்டம் அளவு கடந்த மகிழ்ச்சியோடு ஆரவாரித்தது. இடை விடாது கை தட்டியது. சினிமா கோஷ்டியை சேர்ந்த நிறைய பேர் சறுக்கிக் கொண்டு ஜீப்பை நோக்கி வந்தார்கள். பரசுராமைச் சுற்றிக்கொண்டு மறுபடி கை தட்டினார்கள்.

''அண்ணே.. என்னா..''ரவி அதட்டலாய் கேட்டான்.

''ஒன்னுமில்லடா..''

''சொல்லுங்கண்ணே..''

''ஒன்னுமில்லடா..''

''நிசமாதானா.''

''நிசமாதான். இந்த தடவையும் ஆத்தா காப்பாத்திட்டா. மேல இருந்து கவுறு போடச் சொல்லு. புடிச்சிட்டு ஏறிடலாம். ஏம்பா எல்லாரும் இறங்கறீங்க. நான் தான் வரேனே.''

யாரோ கண்ணில் நீர் தளும்ப பரசுராமைக் கட்டிக் கொண்டார்கள். வேறு யாரோ கன்னத்தில் முத்தமிட்டார்கள். நிறைய பேர் கை குலுக்கினார்கள்.

இன்னும் அரை மணிக்குப் பிறகு அடுத்த ஷாட் வைக்கும்போது எல்லோருமே தன்னை மறந்து விடுவார்கள் என்று பரசுராமுக்கு தெரியும். பரசுராம் கயிறு எடுத்து மேலேறினான். அங்குள்ள பாறையில் உட்கார்ந்து கொண்டு உடம்பில் கட்டியிருந்த பாதுகாப்பு பட்டைகளை அவிழ்க்கத் துவங்கினான்.

''அண்ணே விஸ்கியா... பிராண்டியா...'' காதோரம் கேட்டார்கள்.

''எதுனா கொடு'' பரசுராம் கட்டளையிட க்வார்ட்டர் பாட்டில் விஸ்கி வந்தது. பரசுராம் பாட்டிலை திறந்து நேராக வாயில் ஊற்றிக் கொண்டான். ஐந்து மிடறில் மொத்தமும் காலி செய்தான். அப்போது தான் அவனுக்கும் முற்றிலும் பயம் நீங்கியது. ஷூவை அவிழ்த்து விட்டு ஹவாய் சப்பலுக்கு மாறி பூமிக்கு அழுந்த கால் ஊன்றி நின்றபோது சந்தோஷமாக இருந்தது.

சாயந்தரம் ஆறாயிரம் ரூபா கொடுத்துருவாங்க. வாங்கி ராத்திரி வண்டி ஏறினா காத்தால மெட்ராஸ். இந்த ஆறாயிரத்துக்கு முன் நிலைப்படி, பின் நிலைப்

படி வச்சுரலாம். நிலைப்படி வேலை முடிந்து விட்டால் பூச்சு வேலை ஆரம்பித்து விடலாம். பூச்சு வேலைக்கு சிமெண்ட் வாங்க இந்த மாதிரி மூன்று முறையாவது உயிரைப் பணயம் வைத்து தாவ வேண்டும். எதைப் பணயம் வைத்தாவது வீடு கட்டிக் கொள்ள வேண்டும். ஒரு வீடு சொந்தமாயிருப்பது மனிதனுக்கு அவசியம். செத்தா சொந்த வீட்ல தான் சாவேன் என்பது பரசுராமனின் சபதம்.

அடுத்த ஷாட். அடுத்த ஷாட்.. டைரக்டர் கை தட்ட கூட்டம் கலைந்தது.

விமலாவும், மணிவண்ணனும் கேத்தி ஸ்டேஷனை நோக்கி நடக்கத் துவங்கினார்கள்.

''பின்னாலயே போய் என்னா செய்றாங்கன்னு பாக்கலாமாடா?'' வின்சென்ட்டை அந்த ஜீப் ஜம்ப் தாக்கவே இல்லை போலிருக்கிறது.

''பார்த்து...?'' பாலசுப்ரமணியம் வின்சென்ட்டை கேள்வி கேட்டான்.

''அந்தப் பொண்ணு அவன் தொடறதுக்கு சம்மதிச்சிடுச்சின்னா அது லவ்வுன்னு அர்த்தம். தொடவுடலைன்னா அந்தப் பையன் வம்பு பண்றான்னு அர்த்தம். தொடவுட்டா வாழ்கன்னு சொல்லிட்டு வந்துருவோம். தொடவுடலியா எலும்பெண்ணிடுவேன்னு மிரட்டிட்டு வந்துருவோம். லவ்வுன்னு கன்ஃபர்ம் ஆயிடுச்சு... இன்னாம்மா விமலாவோட சுத்தறியே... எப்ப கல்யாணம்னு கேப்பம். லவ் பண்ணிட்டு எனக்கு தெரியாதுன்னு பின்னாடி சொன்னா தனியா கூட்டிட்டு போய் சப்சப்புன்னு நாலறை வச்சிருவம்''

''உனக்கு ஏன்டா இந்த வேலை?''

''ஏன்? என்ன தப்பு இதுல...?''

''யாரோ யாரையோ என்னவோ செய்துட்டு போறாங்க. அவங்க ஜெயிக்கறதோ தோக்கறதோ அவங்க தலையெழுத்து. நீ எதுக்கு இன்னொருத்தர் விஷயத்துல தலையிடற?''

''எனக்குப் புடிக்காது''

''எது?''

''லவ் பண்ணிட்டு ஏமாத்தறது...''

''இப்ப நீ கோபப்படறதுக்கும் உங்க அக்காவுக்கும் சம்பந்தம் இருக்கா?''

வின்சென்ட் மெல்ல வெளிறினான். பாலசுப்பிரமணியனைத் தவிர மற்ற எல்லா பக்கங்களிலும் பார்த்தான்.

''நான் அவங்க பின்னால போறேன்...'' மெல்ல நகரத் துவங்கினான்.

''என் கேள்விக்கு பதில் சொல்லிட்டு போ, வின்சென்ட்.''

''உன் வீடு நல்ல வீடு பாலு. உன் அப்பா மாதிரி அமைதியானவங்க கிடைக்கறது கஷ்டம். உங்கம்மா மாதிரி சந்தோஷமான லேடி நான் பார்த்தில்லை. எங்கக்கா ஏமாந்ததுக்குக் காரணம் எங்கப்பா. எங்கக்கா ஜெயிக்காததுக்குக் காரணம் எங்கம்மா. அப்பாவோட முரட்டுத்தனம், அம்மாவோட கோழைத்தனம் பசங்களை சாவடிச்சிடும். ரொம்ப முக்கியமா பொம்பளைப் புள்ளைங்களை குழம்படிச்சிடும். வீடு குழம்பிருந்தா பொண்ணுங்களுக்கு தாங்காது. வீட்டை விட மத்த எல்லா இடமும் நல்ல இடம்னு தோணும். தப்புக் கணக்கு போடும். தெரியாதவனை எல்லாம் தெரிஞ்ச மாதிரி நம்பும். தோத்து போவும். வீட்டை விட்டு ஓடி தற்கொலை பண்ணிக்க ட்ரை பண்ணும்.. பொண்ணுங்களை ஏமாத்தக் கூடாது, பாலு. அது பாவம். பொண்ணுங்களை ஏமாத்தினவன் நல்லாவே இருக்க மாட்டான். இது நிஜம். எங்கக்கா மட்டுமில்லை. எந்தப் பொண்ணும் ஏமாறக் கூடாது. ஏமாறது எனக்குப் புடிக்காது. ஏமாத்தினவனை சும்மா வுடமாட்டேன்'' வின்

சென்ட் பல்கடித்தான்.

மறுபடியும் பாலசுப்ரமணியம் தவிர வேறு எல்லா திசைகளையும் வெறித்துப் பார்த்தான்.

''அப்ப நீ போ.''

''நீ வரலியா?''

''நான் எதுக்கு? அனாவசியமா மத்தவங்க விஷயத்துல நான் தலையிடறதில்லை.''

''இவ்வளவுதான் உன் ஃப்ரண்ட்ஷிப்பா?''

''நம்ம சிநேகிதத்தை மனசுல வச்சுதான் நீ மட்டும் போன்னு சொல்றேன். போகாதேன்னு தடுத்தா நீ கேட்கமாட்டே. போய் அவஸ்தைப்படு. நீ மாட்டிக்கிட்டு முழிக்கிற நேரத்துல நான் உதவிக்கு வரேன்.''

''அப்ப அறுத்துட்ட?''

''அக்காவ மனசுல வச்சுக்கிட்டு நீ அவஸ்தைப் படறது நல்லால்ல... இன்னொருத்தர் விஷயத்துல தலையிடறது எனக்கு பிடிக்காது.''

''அங்க நடந்து போறது உன் தங்கச்சியா இருந்தா சும்மா இருப்பியா...''

''அங்க நடந்து போறவளை நான் தங்கச்சியா நினைக்கலாம். அந்தப் பொண்ணு என்னை அண்ணனா நினைக்குமா? அந்தப் பையன் என்னை மச்சான்னு கூப்பிடுவானா? நானும் கணக்கு பண்ண வந்திருக்கேன்னு நினைப்பான். அந்தப் பொண்ணும் தப்பாதான் பேசும். அவங்க பின்னாடி போறது எனக்கு இஷ்டமில்லை.''

''நான் போறேன். நீ வரவேணாம்.'' வின்சென்ட் மலையிறங்கினான். செம்மண் பாதை வழியே அவர்களைப் பின் தொடர்ந்தான்.

ஒருகணம் பாலுவுக்கு வெறுத்துப் போயிற்று. உணர்ச்சி வசப்பட்டவனை நண்பனாகக் கொண்டதில் உண்டான வேதனை புரிந்தது. வின்சென்ட் உணர்ச்சி வசப்படுவது இது முதல் முறையல்ல. வின்சென்ட் அவன் அப்பாவை விறகுக் கட்டையால் அடித்திருக்கிறான். போலீஸ் லாக்கெப்பிலிருந்து பாலுவால் மீட்டு வரப் பட்டிருக்கிறான். அடித்ததற்கான காரணம் மிகச் சரியானதுதான் என்றாலும் அடித்தது சரியல்ல. முனிசிபல் கோர்ட்டில் ஐநூறுரூபாய் அபராதம் கட்டிவிட்டு வந்த வின்சென்ட்டுக்கு வீட்டுக்கு போக மனமில்லை. பாலுவின் அம்மாதான் அவனுக்கு நான்கு நாள் சோறு போட்டாள்.

''அடுத்த தடவை அப்பா மேல ஆத்திரம் வந்ததுன்னு வச்சுக்க எங்கேயிருந்தாவது மொட்டை மரத்தை வெட்டி எடுத்துட்டு வா. ஊட்டுக்கு வந்து கை சலிக்க வெட்டி போடு. அப்பன் மேல கோவமும் போகும். சிம்னிக்கு விறகும் ஆவும். உங்க வீட்ல மரம் இல்லேன்னா எங்க வீட்டுக்கு வா. மரம் வெட்டுவதற்கு நான் ஏற்பாடு பண்றேன். என் ரெண்டு புள்ளையும் ஒருநாள் கூடமரம் வெட்டினது கிடையாது.''

வின்சென்ட் அம்மாவுக்கு மரம் வெட்டி தந்தான். வேலி கட்டித் தந்தான். தோட்டம் முழுவதும் கொத்திக் கொடுத்தான். மழைக்கு ஒழுகாமல் ஓடு மாற்றிக் கொடுத்தான். விரிந்து போன கண்ணாடிகளை உடைத்து மாற்றி புதிது ஒட்டிக் கொடுத்தான். அம்மா நெகிழ்ந்து போனாள். பெரிது பெரிதாய் வின்சென்ட்டுக்கு மீன் துண்டு போட்டாள். காரமான கறிக் குழம்பு ஊற்றினாள்.

''எப்ப மனசு கஷ்டமா இருந்தாலும் இங்க வந்துரு வின்சென்ட். இது உன் வீடுன்னு நினைச்சுக்க.''

வின்சென்ட் மௌனமாக இருந்தான்.

''ஒன்னு சொல்லட்டுமா உனக்கு. தப்பு பண்ணினவனை நாம் மன்னிக்கத் தேவையில்லை. தெய்வம் அடிக்கும். தப்பு பண்ணவன் தெய்வத்துட்டேருந்து கூட தப்பிச்சுக்கலாம். தன் உறுத்தல் கிட்டேருந்து தப்பிக்க முடியாது. உங்க அக்காவை ஏமாத்தினவன் நல்ல படியாவா இருப்பான். உன் கண்ணெதிர அவஸ்தை படப்போறான் பார். அப்படி தெரியலையே. நல்லாதான இருக் கான்னு சொல்லாத. இது நடக்கும் பார்.'' அம்மாவின் பேச்சால் வின்சென்ட்டின் கோபம் குறைந்து விட்டது. ஆனால் பதட்டம் குறைய வில்லை. அவன் அக்கா வேறு யாரோடோ ஓடிப் போய்விட்டாள். எங்கிருக்கிறாள் என்று தெரிய வில்லை. எப்படி இருக்கிறாள் என்று தெரியவில்லை. வின்சென்ட் வீட்டிலும் தேடவில்லை.

ஏற்கனவே காதலுக்காக வீட்டை விட்டு ஓடிப் போனவள்... ஓடிப் போனவ னையும் விட்டு ஓடிப் போய் விட்டாள் என்ற பிறகு அவள் மீது யாருக்கு என்ன அக்கறை வரும். அவள் மீது அக்கறையில்லையே தவிர அவளைப் பற்றி துக்கம் இருந்தது. அந்த துக்கம் தான் தேவையில்லாத ஒரு படபடப்பைக் கொடுத்தது. படபடப்பைத் தடுக்க முயன்றால் துக்கம் பெரிதாகும்.

நீ போ... நான் வரவில்லை என்று பாலு வின்சென்ட்டை அனுப்பியதற்கு இதுவும் காரணம்.

இவருதான்.. இவருதான்... ஒரு பதினைந்து வயசுப் பையன் பாலசுப்ரமணி யத்தை சுட்டிக் காட்டினான். யாரோ இரண்டு பேர் பாலசுப்ரமணியம் அருகே வந்து ஏற இறங்க பார்த்தார்கள். விமலாவைப் பற்றி பேசியது இவர்களுக்கு தெரிந்து விட்டதா? வின்சென்ட் பின்னால் போனதை கவனித்து விட்டார்களா? தன்னால்தான் தூண்டப்பட்டது என்ற நினைப்பா?

எனக்கு தெரியாதுங்க என்று பதில் சொல்ல பாலு தயாரானான்.. வந்தவர்கள் பேசட்டும் என்று காத்திருந்தான்.

''வணக்கம் சார்'' வந்தவர்கள் கை கூப்பினார்கள்.

நீங்க போட்கிளப்ல அதிகாரியா என்று கேட்டார்கள்.

அவன் ஆம் என்று தலையசைக்க, ''கொஞ்சம் இப்படி வாங்க என்று கூட்டிக் கொண்டு போனார்கள்.

''வெங்கடேசு... இவரு போர்ட் கிளப் ஆபீஸரு. நமக்கு வேண்டியவருதான். நாளைக்கு என்ன ஷாட் வேணும் சொல்லு'' என்று வேறு யாரையோ அறிமுகப்ப டுத்தி வைத்தார்கள்.

சந்தித்த முப்பதாவது வினாடியிலேயே எப்படி வேண்டியவனாகப் போனோம் என்று பாலசுப்ரமணியம் திகைத்தான். சினிமாக்காரர்களோடு அவ னுக்கு நேரடி பரிச்சயம் இல்லை. ஆனால் அவனுடைய அதிகாரி இரண்டு முறை ஏமாந்திருக்கிறார். எல்லா உத்தரவுகளையும் அத்துமீறி விட்டு அட்ஜஸ்ட் பண் ணிக்கலாம் சார்... அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம் சார் என்று ஆசை காட்டி விட்டு எந்த அட்ஜஸ்ட்டும் செய்யாமல் போய் விடுவார்கள். உத்தரவுகள் மீறப்பட்டதை உள்ளுக்குள் இருக்கிறவர்கள் சென்னைக்கு எழுதிப் போட விசாரிப்பு வேதனை கள் உயிரை வாங்கும்.

பாலசுப்ரமணியம் உஷாரானான். தன்னை அதிகமாக கேள்வி கேட்டால் நான் வெறுமே பெருக்கி கூட்டுகிறவன் என்று சொல்லி விடலாம் என்று நினைத் தான். உடனே சினிமா கூட்டம கையலம்பி விடும். ஒருவேளை யாரையாவது பிடித்து போட் கிளப்புக்கு வந்தாலும் வரும். ''பெருக்கி கூட்றவருன்னு சொன்

னீங்க. ஆபீஸ்ல உக்காந்துருக்கீங்க...''

''நான் தரைய பெருக்கறவன்னா சொன்னேன். நான் வெறும் கிளார்க் சார். கணக்கு பெருக்கி... கணக்கு கூட்டி... என்று பதில் சொல்லிவிட வேண்டும். இது அம்மா சொன்ன ஜோக்.

எம்புள்ளைக்கு போட் கிளப்ல தினம் பெருக்கி கூட்ற வேலை என்று வாத்தியாரிடம் அம்மா சொல்லியிருக்கிறாள். பெண் கொடுக்கிற வாத்தியார் பெருக்கி கூட்டறதா என்று ஒரு நிமிஷம் திகைத்திருக்கிறார். அந்தப் பெண் புரிந்து கொண்டதாம்.

''அவங்க கணக்கு பெருக்கலை சொல்றாங்கப்பா'' என்று சிரித்ததாம்.

''அடடே...'' என்று வாத்தியாரும் சிரித்தாராம். அம்மாவுக்கு அந்தப் பெண்ணையும், அந்தப் பெண்ணுக்கு அம்மாவையும் பிடித்து விட்டது. ஆனால் வாத்தியார் சந்தேகப் பேர்வழி. நிஜமாகவே என்ன பெருக்குகிறான் என்று தெரிந்து கொள்ள போட் கிளப்புக்கு வந்து விட்டார். ஆனால் அவர் வந்த நேரத்தில் சூசையப்பனோடு ஓட்டை விழுந்த போட்டுக்கு பாலு தகரமடித்துக் கொண்டிருந்தான். சூசைக்கு நடுக்கமான கைகள். குடித்து குடித்து கையில் சுத்தி உறுதியாக நிற்கவேயில்லை. ஆணியிலிருந்து அரையடி தள்ளிதான் சுத்தி மோதியது. இன்னொரு ஓட்டை விழுந்து விடுமோ என்று பயமாக இருந்தது. நகருய்யா என்று அவனை விரட்டி விட்டு பெடல் போட்டின் அடியில் வட்டத்தகரம் வைத்து சுற்றிலும் சிறிய ஆணிகள் பனிரெண்டு அடிக்க தகரம் அசையாது நின்றது.

வாத்தியார் நாலடி பின்னால் தள்ளி கவலையோடு பாலுவைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஊட்டியில் மட்டும் நன்றாக உடுத்தியவனை படித்தவன் என்று நம்ப முடியாது. கோட்டு போட்டவனை கோடீஸ்வரன் என்று கணக்கில் சேர்க்க முடியாது. தினக்கூலி ஆள் கூட கோட்டு போடும் இடம் அது. ஐயா வாங்க என்று உள்ளே அழைத்துப் போய் அதிகாரிக்கு தனக்கு தெரிந்தவர் என்று அறிமுகப்படுத்தி அவர் காதோரமாய் இவர் பொண்ணை எனக்கு பேசிருக்கு சார். நான் போட்கிளப்ல தான் வேலை செய்யறேன்னா பாக்க வந்திருக்காரு போல. எது உண்மையோ அத நீங்க சொல்லணும்.''

''சொல்றது என்னா ரெக்கார்டு காமிச்சிடறேன்'' என்று புகைப்படத்தோடு உள்ள ஃபைல் காண்பித்தார். கடைசி மாச சம்பளப் பட்டியலைக் காட்டினார்.

''பாலு நல்ல புள்ளைங்க. ஒரு கெட்ட பழக்கம் கிடையாது. ஒரு பிளாக் மார்க் கிடையாது. அதிர்ந்து பேசமாட்டார். நீங்க தைரியமா சம்பந்தம் பேசலாம்'' என்று உடைத்து விளக்கினார்.

வாத்தியாருக்கு சங்கடமாகியிருக்க வேண்டும். ''நான் ஒன்னும் சந்தேகப்படலை தம்பி'' என்றார்.

''பட்டாலும் தப்பில்லை. நல்லா விசாரிக்கிறது தான் முறை. ஒருநாள் வீட்ல எல்லாரையும் கூட்டிட்டு வாங்க. போட்ல போயிட்டு வரலாம்'' இதமாய் பேசினான்.

அவர் தன் வருமானம் பற்றி பேசிவிட்டு பெண்ணின் படிப்பு பற்றி சொல்லிவிட்டு விடை பெற்றுப் போனார்.

பெண்ணுக்கு அதே கூட்டல் கழித்தல் வேலை. ஆனால் இவனைப் போல் பென்சிலால் பெருக்கிக் கொண்டிருக்கவில்லை. கம்ப்யூட்டர் படிப்பில் டிப்ளமா வாங்கியிருக்கிறது. ஏதோ ஒரு கம்ப்யூட்டர் சென்டரில் பயிற்சியாளராய் இருக்கிறது. அந்தப் பெண்ணுக்கு சொந்தமாய் ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி நிலையம் ஆரம்பிக்கும் ஆசை இருக்கிறது என்று விளக்கினார். அப்ப வரேங்க என்று விடை

பெற்றுப் போனார்.

பெண்ணைப் பெற்றவர்கள் எல்லோருக்கும் ஒரு கவலை இருக்கிறது. தானும் ஒருநாள் இப்படி கவலைப் படுவோமோ என்று யோசனை வந்தது. தனக்கு வயதாகி ஏதோ ஒரு இளைஞனை பெண்ணுக்கு பேசி அவன் எங்கு வேலை செய்கிறான் என்று துணிப்பையை எடுத்துக் கொண்டு நாமும் தேடுவோமோ என்று யோசனை வந்தது. வாத்தியாரின் மகளைப் பார்க்கும் ஆவல் வந்தது. ஆனால் உடனே போகாமல் ஒருமாதம் கழித்துப் போகலாம் என்று எண்ணம் ஏற்பட்டது. இந்த கோடை சீஸன் முடியட்டும். வெறுமே பெண் பார்க்க போவதை விட அந்தப் பெண்ணை வேறு எங்கேனும் சந்தித்து பேச முடியுமா? பேசிப் புரிந்து கொள்ள முடியுமா என்கிற ஆவல் ஏற்பட்டது. அம்மாவிடம் சொன்னால் கேலி செய்வாள்.

''கூட்டிட்டு பேய்மந்துக்கு போயிடுடா அதான் வசதி'' என்பாள்.

''எனக்குத் தெரிஞ்சு எல்லா சினிமாவுலயும் பேய் மந்துலதான் லவ் பண்ணுவாங்க.

''அடச்சீ போ...'' பாலுவுக்கு வெட்கம் பற்றிக் கொள்ளும்.

''ஆனா. வூட்டுக்கெல்லாம் கூட்டிட்டு வந்துராதப்பா... அது நல்லாருக்காது. வாத்தியார் இங்க வந்து கண்காணிக்கும்படியா ஆயிடும். கண்காணிக்காறது பத்தி எனக்கு ஒன்னுமில்லை. அவர் வந்து இங்க உக்காந்திருக்க உங்கப்பா என்னை தப்பா நினைச்சுக்கக் கூடாது பாரு...''

''கெழவி... எதாவது வயசான லட்சணமா பேசறியா நீ... எங்கப்பா மாதிரி ஒரு புருஷன் கிடைக்க நீ குடுத்து வச்சிருக்கணும்.''

அம்மா சட்டென்று உள்ளே அமிழ்ந்து போவாள்.

''நாப்பது சவரன் போடறேன்னு சொல்லிட்டு எங்கவீடு நாலு சவரன் குறைச்சலா போட்டுது. இவரு ஏன் குறைச்சல்னு கேக்கவேயில்லை. எனக்கு வரவேண்டிய நாலு சவரன் வரலியேன்னு எனக்கு கோவம். அப்ப உங்கப்பா வெலிங்டன்ல ...நங்க ...

...ஷன் அடிக்கிறார். நாலு சவரன் அனுப்புங்கன்னு நானா எழுதினேன். ...நந்தையோட ஆறேழுபேர் எங்க வூட்லேர்ந்து வந்துட்டாங்க. வழில ...வ பார்த்திருக்காங்க. கேட்டா போட்டிருக்க மாட்டமா... அதுக்காக ...க வூட்டு பொண்ணை அடிக்கணுமான்னு கேட்டிருக்காங்க. உங்கப்பா ஆடிப் போயிட்டார். நேர வூட்டுக்கு கூட்டிட்டு வந்தார். நாலு சவரன் நகையைக் கைல வாங்கினார். ஒத்த மூங்கில் சங்கிலி அது மெல்லிசா டாலர் இருந்தது.

''நான் இதுக்கு ஆசைப்படலீங்க. நீங்க அவளுக்கு போட்டதை எத்தினின்னு கூட எடை போட்டு பார்க்கலை. கெட்டிக்கார பொண்டாட்டி நல்ல குணம்னு ...ந்தோஷப் பட்டிருக்கேன். இப்படி பண்ணிடுச்சேன்னு வருத்தமா இருக்கு. இந்த நகைய பாத்தா என் மனசு வேதனைப் படும். என் பொண்டாட்டிட போட்டுக் ...ட்டா தான் ஜெயிச்சு வாங்கினதா கர்வம் வரும். ஒரு நூறு ரூபா தரேன். இங் ...கர்ந்தே திருப்பதிக்கு வண்டி ஏறி இதை கோயில் உண்டியல்ல போட்டுருங்க. இது ஆணை. இது யார் கழுத்துல போட்டுக்கிட்டாலும், கெடுதல் வரும். இதுவம் ஆணை. சங்கிலிய எங்கப்பா உள்ளங்கைல வச்சு கையடிச்சு குடுத்தார். எங்க வூடு ஆடிப் போச்சு.

பைத்தியம், பன்னாடை, கெடுபுத்தி, ராட்சஸின்னு என்னை திட்டுச்சு. உங்கப்பா சொல்படியே நகைய திருப்பதி உண்டியல்ல போட்டுருச்ச. எங்கூட ரெண்டு மாசம் உங்கப்பா பேசலை. கால்ல வுழுந்து மன்னிப்பு கேட்டபிறகுதான்

பேசினாரு. நீ மன்னிப்பு கேக்கணும்கறத்துக்காக நான் பேசாத இல்லை. மறுபடி இந்த மாதிரி நீ பண்ணக்கூடாதுன்னு தான் பேசாம இருக்கேன். நான், நாலு அண்ணன், ரெண்டு அக்காவோட வளர்ந்தவடா... கோயம்புத்தூர்ல தினமும் அரை வட்டமாதான் உக்காந்து சாப்பிடுவோம். வாய் ஓயாத அரட்டை அடிப் போம். சண்டை போடுவோம். எதிர் வூட்டு கல்யாணப் பொண்ணு புருஷனுக்கு முத்தம் கொடுக்கறதை எல்லாருமே மொட்டைமாடில ஒளிஞ்சிருந்து எண்ணு வோம். மாசம் தவறாம சினிமாவுக்கு கும்பலா போவம். படம் புடிக்கலேன்னா கைதட்டி கலாட்டா பண்ணுவோம். கோணியம்மன் திருவிழாவுல சாக்லேட் வாங்கறதுக்காகவே காணாத போயிட்டமாதிரி என்ன நடிக்க சொல்லுவாங்க. பத்தடி தூரத்துலயே அண்ணன் இருப்பார். எங்கப்பாவ காணம்னு நான் புரண்டு, புரண்டு அழுவேன். எட்டு வயசிலயே எனக்கு வினைன்னு தான் பேரு. நான் இப்படி விளையாடறதுக்கும், கேலி பண்றதுக்கும் எங்க அண்ணன் அக்காதான் காரணம். இப்படி ஆட்டம் பாட்டமா இருந்தவளை வூட்டில தனியா உக்காந்து மலைய பாருடின்னு உக்கார வச்சுட்டாங்க. முதல்லாம் பைத்தியம் புடிச்சா மாதிரி இருக்கும். இப்ப பழகிப் போச்சு. இருந்தாலும் அந்த எட்டு வயசு பத்து வயசு புத்தி போகலை.

இப்ப கூட கோயம்புத்தூர் போயிட்டா இறங்கினவுடன எதுனா சண்டை புடிப்பேன். சண்டைன்னா நிஜ சண்டை இல்லை. வம்பு, சும்மா அக்காவப் பாத்து உம்புள்ளை உன்னை மாதரியும் இல்ல. உன் புருஷன் மாதரியும் இல்லன்னுவேன். ஆஸ்பத்திரில மாத்திட்டாங்களா... இல்லை நீ எங்கனா மாறிட்டியான்னு கேப் பேன். ரெண்டு நாளைக்கு சந்தோஷமா சண்டை போடுவோம்.

''மூணாநாள்?'' பாலு ஆவலுடன் கேட்டான்.

''வேற சண்டை தானா வந்துரும். உங்கப்பாவ புடிக்காம இல்லை. அவர் கிட்ட எந்த குறையும் இல்லை. எனக்கு தோதா சண்டைபோட ஆள் இல்லை. அந்த வாத்தியார் பொண்ணுசண்டை போடற ஜாதின்னு தோணறது. சுறுசுறுப்பா சொல்லுக்கு சொல் பதில் பேசுது. பேசாம அதயே கட்டிக்க. எனக்கு பொழுது போவும். விளையாட்டுன்னு ஆரம்பிச்சு நிஜமா சண்டை போட்டீன்னா அப்புறம் நான் மட்டும் பேய்மந்துலு ஆடணும். இப்பல்லாம் சோகப் பாட்டும் பேய்மந்துல தான் எடுக்கறாங்க. ஆத்திரத்துல சண்டை போடறவனக்குதான் அளவு தெரியாது. எனக்கு மனுஷாள் மேல பிரியம் உண்டுடா. உம் பொண்டாட்டிய ஒன்னும் பண்ணிடமாட்டேன். பயப்படாத.''

இப்படி ஒரு அம்மா கிடைத்தது புண்ணியம் ஆனால் விசித்திரம்.

ஒன்னுமில்லீங்க ஜீப் ஜம்ப் முடிந்த பிறகு ஜீப் ப்ளாஸ்ட் ஆவுது. பிளாஸ்ட் ஆன ஜீப்புலேர்ந்து ஹீரோ ஓடறாரு. ஓடி காட்டுல புகுந்து ஏரி ஓரமா இருக்குற மோட்டார் போட்ல ஏறி தூரத்திட்டு வர போலீஸ் ஷூட் பண்றதுக்கெல்லாம் தப்பிச்சு வளைஞ்சு வளைஞ்சு ஓட்டி ரொம்ப தொலைவு போயிடறார். போலீஸ் பிடிக்க முடியாம ஏமாந்துருது. மத்ததெல்லாம் எடுத்துட்டோம். போட் மட்டும் தான் பாக்கி.

''சார் நாளைக்கு அங்க ஷூட்டிங் வச்சிரலாமா?'' வழுக்கை தலையாய் உள்ள பெரியவர் கேட்டார்.

பாலுவுக்கு பதில் சொல்லத் தெரியவில்லை. வின்செண்ட் அருகே இல்லாத தைக் குறையாக உணர்ந்தான்.

''நீங்க வீட்டு அட்ரஸ் குடுங்க. சாயந்தரம் வீட்டுக்கு வந்து பாக்கறேன். மிஞ்சி போச்சன்னா ஒன்னவர் . இந்தப் பக்கத்துலேர்ந்து அந்தப் பக்கத்துக்கு போட் போகணும். போறது கொஞ்சம் வளைஞ்சு வளைஞ்சு போகணும்.''

''என் வீட்டுக்கெல்லாம் வந்து பிரயோஜனம் இல்ல சார். நான் சாதாரண கிளார்க். இதுக்கு பர்மிஷன் வாங்கறதுக்கு மெட்ராஸ் ஆபீஸ்ல தான் கேக்கணும்.''

''சும்மா ஒன்னவர் சார்.''

''ஒன்னவரா இருந்தாலும் மெட்ராஸ்தான் பர்மிஷன் தரணும்.''

''உங்க மெட்ராஸ் ஆபீஸ் சரின்னு சொல்லிடுச்சுன்னா நீங்க தடுத்தற கூடாது''

''நான் யார் சார் தடுக்க?''

''வந்துட்ட பிறகு இல்லேன்னு சொல்லக் கூடாது.''

''நான் யார் சார் சொல்ல? பர்மிஷன் குடுக்கறது மெட்ராஸ். அதுக்கப்பறம் நீங்க கான்டாக்ட் பண்ண வேண்டியது எங்க மேனேஜரை. நான் இங்க நின்னு வேடிக்கை பாக்கற மாதிரி அங்க நின்னு வேடிக்கை பாக்கறேன். அவ்வளவுதான். '' யாரோ ஒரு பையன் தட்டு நிறைய டம்ளர்களில் டீ கொண்டு வந்து தர,

சாருக்கு குடு... சாருக்கு குடு என்று எல்லோரும் கூறி அவன் கையில் ஒரு டீ டம்ளரைக் கொடுத்தார்கள்.

''அடுத்தது பிளாஸ்ட் சார். இருந்து பாத்துட்டு போங்க.'' என்று உபசரித்தார் கள். ''சும்மா சுக்கல் சுக்கலா வெடிக்கும். மொத்த ஜீப்பும் தீ புடிச்சு எரியும்.''

ஊட்டி வனப் பகுதி. நெருப்பு மூட்டக் கூடாது என்று நிரந்தர உத்தரவு உண்டு. வனங்கள் பாதுகாக்கப்பட வேண்டிய விஷயம். இவர்கள் யாரிடமாவது இதற்கு பர்மிஷன் வாங்கியிருக்கிறார்களா என்று தெரியவில்லை. இதற்கு எங்கு ...ஷன் வாங்க வேண்டும் என்பது தெரியவில்லை. வெடிமருந்து ஆட்கள் சரிவில் இறங்கி பெட்ரோல் பையும் ரப்பர் ஒட்டுகிற பசையுமாய் ஜீப்புக்குள் புகுந்து கொள்ள மூன்று கேமராவும் வெவ்வேறு திசைக்கு போய் தங்களை தயார் ...நு கொண்டன. பாலுவுக்கு ஒரு பாறை பக்கத்தில் நாற்காலி போடப்பட்டது.

''டேய்... இவரையும் கவனி'' என்று உத்தரவிடப்பட்டது. பாலு உட்கார்ந்த நாற்காலிக்கு பக்கத்தில் பரசுராம் பாறையில் உட்கார்ந்திருந்தான்.

அவன் குடித்த விஸ்கி வேலை செய்ய துவங்கியிருந்தது. ரத்தம் பூராவும் பரவி அவனை சந்தோஷப் படுத்தியிருந்தது. உலகத்தில் உயிர் வாழ்தல் பற்றி எந்த பயமுமின்றி உற்சாகமாக பரசுராம் இருந்தான். உலகத்தில் உள்ள எல்லா மக்கள் ...தும் அன்போடு இருந்தான். பக்கத்தில்பாலு உட்கார்ந்ததும் எழுந்து நின்று தலைக்கதிகமாய் கை கூப்பியபடி இருந்தான். பாலுவுக்கு அவன் குடித்திருக்கி ...ன் என்று தெரியாது. பரசுராமுக்கு அவன் யார் என்று தெரியாது. சினிமாவில் ...வர் உட்கார நாற்காலி போட்டார்கள் என்றால் அவன் நிச்சயம் பெரிய ஆளாய் ...ருக்க வேண்டும். உயிரைக் கொடுத்து ஜீப் தாவல் நடத்திய பிறகு பரசுராமுக்கு ...ற்காலி போடவில்லை. போடமாட்டார்கள். போடுகிற அளவுக்கு பரசுராம் பெரிய ஆள் இல்லை.

பாலுவுக்கு அந்த கைகூப்பல் ஆச்சரியமாக இருந்தது. எழுந்து உக்காருங்க என்று தன் நாற்காலியைக் காட்டினான்.

''அடட... நீங்க உக்காருங்க'' பரசுராம் பாலுவை அழுத்தினார்.

பாலு மறுபடியும் பொத்தென்று நாற்காலியில் உட்கார்ந்தான்.

''ஜீப் ஜம்ப் ரொம்ப நல்லா இருந்துதுங்க'' பாலு கை நீட்டினான்.

''ரொம்ப நன்றிங்க'' பரசுராம் கைகுவித்தான். பாலு கைகுவித்தபோது பரசு ராம் கை நீட்டினான். பாலு மறுபடி கை நீட்டியபோது பரசுராம் மறுபடி கைவித் தான். இரண்டு மூன்று செய்கைகள் தவறாகி நான்காவதில் சரி செய்து கொண்டார்

கள். சும்மா அருகருகே உட்கார்ந்திருந்தார்கள்.

''உங்க பேர் என்னாங்க?''

''பரசுராம்ங்க''

''ஸ்டண்ட் ஆளா?''

''டான்ஸ் ஆடுகிறவனா இப்படி குதிக்க முடியும்? அல்லது குதிக்கிறவனுக்கு மேக்கப்மேன் என்று பெயர் உண்டா? ஸ்டண்ட் ஆள்தான் இப்படி குதிக்க முடியும். அந்த ஸ்டண்ட் ஆட்களிலும் பரசுராம் மட்டும்தான் ஜீப் ஜம்ப் செய்ய முடியும். ''ஆமாங்க'' பரசுராம் நிதானமாய் சொன்னான்.

''குதிக்க வேண்டிய இடம் தாண்டி வண்டி இறங்கிடுச்சா.. ரொம்ப பயந்துட்டேன்''

''அது ஒன்னும் ஆவாதுங்க.''

''கொஞ்சம் பயம் இருக்காது?''

''பயந்தா தொழில் செய்ய முடியாதுங்க.''

''சரி... தொழில்தான். இருந்தாலும் பயம் வந்துருமே. குதிக்கிற நேரத்துலயாவது லேசா ஒரு பயம் வருமே.''

''பயம் வரும். போவும்.''

''உங்களுக்கும் பயம் வருங்களா?''

''பயம் வருங்க.''

''எப்ப... குதிக்கிறப்பவா?''

''அதுக்கு முன்னாடியே...''

''எப்ப?''

''மாஸ்டர் உசர ஜீப் வச்சு இங்கேர்ந்து குதிக்கணும்னு சொன்னதுமே பயம் வந்துரும். ஐயோ... குதிச்சு கரையேறனுமேன்னு தோணும்.''

''அப்புறம்...?''

''ஜீப்பாண்ட போறப்பவும் பயம் இருக்கும்.''

''அப்புறம்?''

''ஜீப்ல ஏறி உக்காரச் சொல்ல இதான் கடைசி ஜம்ப்னு நினைச்சுக்குவேன்.''

''ஐயோ... அப்புறம்?''

''குதிக்கிற நேரத்துல கண்ணை மூடிக்குவேன்.''

''அப்ப எல்லா நேரத்துலயும் பயம் இருக்குன்னு சொல்லுங்க''

''எல்லா நேரத்திலயும் பயப்படறவன் ஜம்ப் பண்ண மாட்டான். வுட்டுட்டு ஓடிடுவான்''

''உங்களுக்கும் எல்லா நேரத்திலயும் பயம் இருக்கே.''

''பயம் வரும், போவும்.''

''அப்படீன்னா...?''

''கொஞ்சம் பயம் வரும். அப்புறம் தகிரியமாயிடுவேன். மறுபடி [illegible]ம் வரும். மறுபடி தகிரியமாயிடுவேன்.''

''குதிக்கிற நேரம் என்னா வரும்?''

''அப்ப ஒன்னும் தெரியாது. கண்ணை மூடிக்குவேன்.''

''டம்மு கும்னு இடிக்குதே... அப்ப?''

''பேசாத இருந்துடுவேன். ஓடறமுட்டும் ஓடட்டும்னு உக்காந்துருவேன்.''

''உள்ள அடிபடாது.''

''படாதுங்க. கை காலுக்கெல்லாம் பேட் போட்டுக்குவேன்.''

''இதத் தாண்டி அடிபடாதா?''

''சிலசமயம் படும். டாக்டர் கிட்ட போயிடுவேன். போன தடவை ஒரு மாருதி கார்ல ஜம்ப் பண்ண சொன்னாங்க. இந்தக் கார் வேணாம்னு சொல்லிப் பாத்தேன். கேக்கலை. ஹீரோவோட தங்கச்சிவெறி புடிச்ச மாதிரி ஓட்டி தற் கொலை பண்ணிக்கிற ஸீனாம். ரெண்டு, மூணு டேஷ் குடுக்க சொன்னாங்க. நான் ஆறு டேஷ் குடுத்தேன்.''

''ஒரு ஜம்ப்புக்கு எவ்வளவுங்க தருவாங்க?'' பாலு கேட்கும் போதே தன் கேள்வி அபத்தமாயிருப்பதை உணர்ந்தான். ஆனாலும் கேட்காமலிருக்க முடிய வில்லை''

''ஒன்னும் பெரிய காசில்லைங்க. ஒரு ஜம்ப்புக்கு ஆறு ரூபா தருவாங்க. மாருதிக்குபத்து ரூபா வாங்கினேன். ஆனா அடிபட்டு போச்சு.''

''எங்க?''

பரசுராம் பெருமையோடு வலது கால் பேண்ட்டை வலித்து காட்டினான். சாண் நீள தையல் ஆடுதசையில் போட்டிருந்தது.

மாருதி இடிதாங்கலை. கதவு தகரம் கிழிஞ்சு கால் அறுத்துடுச்சு. வெளிய வந்த பிறகுதான் கிழிஞ்சுபோனது எனக்கே தெரிஞ்சுது. அங்கேயே கட்டு போட்டு ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு போயிட்டாங்க. பன்னெண்டு தையல்.

பாலுவுக்கு அதைப் பாராட்டுவதா அவன் திறமைக்கு வாழ்த்துவதா என்று தெரியவில்லை. திகைத்து போய் உட்கார்ந்திருந்தான். பாலுவின் திகைப்பு தான் பரசுராமுக்கு பாராட்டாக இருந்தது. ஜீப் தாவலைப் பார்த்த நிறைய பேர்கள் இப்படித் தான் திகைத்து போவார்கள்.

''ஏங்க கால் கோணலா இருக்கு..''

''அது எம்.ஜி.ஆர். பீரியட்லேயே உடைஞ்சு போச்சு.'' அந்த காலத்துல மோட்டார் சைக்கிள் ஜம்ப் பண்ண பன்னெண்டாயிரம் ரூபா குடுத்து பாம்பே லேர்ந்து ஒரு ஆளைக் கூட்டியான்ந்தாங்க. வந்த ஆளு ஷூட்டிங் ஸ்பாட்ல கால் மேல கால் போட்டுக்கினு சிகரெட் புடிச்சிக்கிட்டிருந்தான். எம்.ஜி.ஆர். வரப்ப வும் அப்படியே இருந்தான். எம்.ஜி.ஆர். யாரு என்னான்னு அவனுக்கு தெரியாது. எம்.ஜி.ஆர். தொலைவுலேர்ந்து அவனைப் பார்த்தார். யாரதுன்னு கேட்டார். விவரம் சொன்னாங்க. காசு செட்டில் பண்ணி ஊருக்கு திருப்பி அனுப்பிச்சிருங் கன்னுட்டாரு. அனுப்பிச்சிட்டாங்க. நம்ம பக்கம் ஆள் இல்லையான்னு கேட் டார். எம் பேரு சொல்லிட்டாங்க. என்னை இட்டாந்தாங்க. அறுவதடி தாண்டுவி யான்னாரு. தாண்டுவேன் தலைவரேன்னு சொன்னேன். எம்.ஜி.ஆர். கண்ணு முன்னாடியே தாண்டினேன். மோட்டார் சைக்கிள் பேலன்ட். ஆகறப்ப வலது பக்கமா சாஞ்சு கியர் பெடல் அடிபட்டு பெடல் என் கால்ல அடிச்சிடுச்சு. வலி காட்டாத சமாளிச்சிட்டு நடந்தேனா. என் பாடி வெயிட் தாங்காத க்ராக்விட்ட எலும்பு ரெண்டா உடைஞ்சு போச்சு. எம்.ஜி.ஆர். புரிஞ்சிக்கிட்டாரு. அசையாத அப்படியே நில்லுன்னு கத்தினாரு. பெரம்பு நாக்காலில கம்பு கட்டி அப்படியே ஆஸ்பத்திரிக்கு தூக்கிட்டு போயிட்டாங்க. ஜம்ப்புக்கு நாலாயிரம் குடுத்தாங்க. அன்னி தேதிக்கு நாலாயிரம் பெரிய காசு. ஆஸ்பத்திரி செலவு மொத்தமும் தலைவரே ஆள்விட்டு அனுப்பி செட்டில் பண்ணாரு கால் ஆப்பரேஷன் பண்ணி உடைஞ்சு போன பட்டை எலும்பு கம்பி வுட்டு கட்டிட்டாங்க. ரொம்ப நாள்.

'நொண்டி நொண்டி தான் நடந்தேன்.''

''எப்ப எம்.ஜி.ஆர். பார்த்தாலும் பரசுராமா, கால் எப்படியிருக்குன்னுதான் கேப்பாரு. ஆனா லேசா வலி இருந்துக்கினே இருந்துது. ஒரு தடவை ஷு போட்டு ஓடற வண்டிலேர்ந்து காலை வெளிய நீட்டி ப்ரேக் போடச் சொன்னாங்களா?... நானும் செய்தேனா... அது செய்த பிறகு வலி ஜாஸ்தியாயிடுச்சு. ரெண்டு நாள் பொறுத்து பாத்தா கால் இத்தே பெரிசு வீங்கிப் போச்சு.

''எனக்குன்னு ஒரு டாக்டர் இருக்காரு. அவராண்ட போயி மரத்து போற துக்கு ஊசி போடுங்கன்னேன். நாலு ஊசி போட்டாரு. உள்ளுக்குள்ள கம்பி குத்துது. இந்த இடத்துல அறுத்துருங்கன்னேன். வலது புற காலை தொட்டுக் காட்டினேன். டாக்டர் மாங்கா வெட்டற மாதிரி அறுத்தாறு அங்கதான் கம்பி இருக்கு. புடுங்கிடுங்கன்னேன். ''யோவ் அதெல்லாம் புடுங்க முடியாதுன்னார். நீங்க புடுங்க வேணாம். கொறடாவ மட்டும் குடுங்கன்னேன். அவரிட்டேருந்து கொறடா வாங்கி பொளந்த இடத்துல வுட்டு கம்பிய கண்டு பிடிச்சு பளிச்சுன்னு இழுத்துட்டேன்.''

பாலசுப்ரமணியம் முகம் சுளித்துக் கொண்டான். தன் காலில் யாரோ குற டால் குடைந்தது போல் கஷ்டப்பட்டான்.

அவன் வேதனை பரசுராமுக்கு சந்தோஷமாக இருந்தது.

''அப்புறம்...?''

''சட்டு புட்டுன்னு சைக்கிள் ரிக்ஷாவுல வூட்டுக்கு வந்துட்டேன். பத்து நாள்ல எல்லாம் சரியா போச்சு.''

ஆனந்தமாக பரசுராம் தன் அனுபவம் விவரிக்க அதிசயமாய் பாலசுப்ரமணி யம் கேட்டுக் கொண்டிருப்பதை இரண்டு மூன்று பேர் பார்த்தார்கள்.

''அண்ணே... ஒரு நிமிஷம் வாங்க. டைரக்டர் கூப்பிடறாரு'' என்று அழைத் தார்கள்.

கொஞ்சம் இருங்க. பாலுவிடம் பரசுராம் சொல்லி விட்டு பரசுராம் டைரக்ட ரிடம் ஓடினார்.

''பரசுராமண்ணே, அந்தாள் தான் போட் கிளப்புக்கு ஆபிஸரு. அவன் நினைச்சா.. மெட்ராஸுக்கு அலையாத பர்மிஷன் தரமுடியும். மெட்ராஸுக்கும் நாங்க பேசறோம். அப்படியே அன்பா பேசி பர்மிஷன் வாங்குங்க. ஒன் அவர் வேலை தான். சும்மா இந்தப் பக்கத்துலேர்ந்து அந்தப் பக்கம் மோட்டார் போட் போகணும், அவ்வளவுதான்.''

''மோட்டார் போட் ஓட்டறது யார் சார்?''

அந்த டைரக்டர் இளைஞன் கெட்டிக்காரன். ஆளை எடை போடும் சாமர்த்தி யம் உள்ளவன். ''வேற யார் ஓட்டறது. நீங்க தான் ஓட்டணும். ஓட்டுவீங்கல்ல.''

''இதுமட்டும் ஓட்டினது இல்ல. அங்கயே யாரிட்டாவது கத்துக்கினு ஓட்டிர் றேன். வேற யாரிட்டயும் இந்த வேலைய குடுக்காதீங்க தம்பி.''

''நீங்கதான் ஓட்டறீங்க. ஆனா எப்படியாவது பர்மிஷன் வாங்கிடுங்க. தர மாதிரி பேசினா என்கிட்ட கண்ணு காமிங்க. ஒன்னும் சும்மா கேக்கலை. அஞ்சு, பத்து குடுத்துரலாம். ஒரு மோட்டார் போட் ஓட்டினா படம் த்ரில்லா இருக்கும்.''

''எப்படியும் வாங்கிடலாம். கவலைப்படாதீங்க பரசுராம் உறுதிகூறிவிட்டு மறுபடி பாலுவிடம் வந்தார்.

''காபி சாப்பிடறீங்களா?''

''இப்பதான் டீ சாப்பிட்டேன்.''

''பரவாயில்ல காபி சாப்பிடலாம். குளிருக்கு இதமா இருக்கும். ஜம்ப் முடிச்சுட்டு நான் கொஞ்சம் விஸ்கி சாப்பிட்டேன். தப்பா நினைச்சுக்காதீங்க. சார் ட்ரிங்க் சாப்பிடுவீங்களா?' கட்டை விரலை வாயருகே கொண்டு காட்டினான்.

''ஐய்யய்யோ.. அந்தப் பழக்கமெல்லாம் கிடையாது.''

''ரொம்ப நல்லது. ஊட்டிலேர்ந்துகிட்டும் டிரிங்க் சாப்பிடலேன்னா அது பெரிய விஷயம். ஐயா எங்க வேலை செய்யறீங்க?''

''சுற்றுலா வளர்ச்சித்துறை.''

''போட் ஓட்டற இடத்துல வேலை செய்யறீங்களா?''

''அங்க தான். இவங்க கூட நாளைக்கு போட் ஓட்டணும்னு பர்மிஷன் கேட்டாங்க.''

''குடுத்தீங்கன்னா நல்லா இருக்கும். நாளைக்கு நாந்தான் போட் ஓட்டணும். ஒன்னவர் வேலை. இந்தக் கோடிலேர்ந்து அந்தக் கோடி போகணும்.''

''அது கஷ்டங்க. மெட்ராஸ்ல பர்மிஷன் வேணும்.''

''அதுல்லாம் செய்துருவாங்க. காலைலேயே போன் போட்டு சொல்லிட்டாங்களாம். உங்க ஆபீஸுக்கு இன்னேரம் ஆள் போயிருக்கும்''

''மெட்ராஸ்ல சரின்னு சொல்லிட்டா எங்களுக்கு ஒன்னும் பிரச்சினையில்லை. சீஸன் ஆரம்பிச்சிடுச்சு. கூட்டம் ஜாஸ்தியிருக்கும்.''

''அதெல்லாம் நாங்க பாத்துக்கறோம். ஒரு நல்ல போட்டா குடுத்தீங்கன்னா சர்ருன்னு ஓட்டிட்டு போயிட்டு ஓட்டிட்டு வந்துருவேன். மோட்டார் போட் இருக்குங்களா?''

''மூணு இருக்கு.''

''பெரிய போட்டுங்களா?''

''பத்து பன்னெண்டு பேர் போலாம்.''

''நல்ல ஸ்பீடு போகுங்களா?''

''நாப்பது கிலோ மீட்டர் ஸ்பீடு போகும்.''

''கவுராதுங்களே.''

''அது சொல்ல முடியாது. ரொம்ப வேகம்னா கவுந்துரும். நிதானமா போனா கவுராது.

நாளைய ஓட்டம் பற்றி பரசுராமுக்கு இப்போதே பயம் வந்தது அவன் தொலைவிலுள்ள மரங்களைப் பார்க்கத் துவங்கினான். அந்தப் பக்க மலைச் சரிவு முழுவதும் நூற்றுக் கணக்கான வீடுகள் இருந்தன. எல்லாம் ஓட்டு வீடுகள். தோட்டமும் வேலியும் கொண்ட ஓட்டு வீடுகள்.

விழுப்புரத்தில் இந்த மாதிரி ஒரு வீட்டில் தான் தோட்டமும் வேலியும் கொண்ட ஓட்டு வீட்டில் தான் பரசுராம் பிறந்தான், வளர்ந்தான். அந்த வீட்டில் படியேறாதே என்று ஒரு நாள் அவன் அம்மா சொல்லி விட்டாள். ''ஒரு நாளைக்கு பத்து ரூபா சம்பாதிக்க துப்பு இல்ல... சோறு தின்ன மட்டும் நாய் மாதிரி வரியே... போ வெளியே என்று சொல்லி விட்டாள்.

பரசுராம் வீட்டை விட்டு வெளியே வந்த பிறகு தான் வேலையில் சேர்ந்தான். அது ஸ்டண்ட் வேலையல்ல. ரயில்வே வேலை. ரயில்வே கலாஸி வேலை. அந்த ரயில்வே வேலையில் சேருவதற்கு நானூறு மீட்டர் ஓட்டமும் பத்தாவது தவறிய சர்டிபிகேட்டும் உதவி செய்தன.

''பத்தாவது படிச்சிருக்கேன்ற.. தினத்தந்தி பேப்பர் வேகமா படிக்க மாட்

டேன்ற..'' ரயில்வேயில் கேள்வி கேட்டார்கள்.

''நான் பத்தாவது படிச்சதே ஸ்போர்ட்ஸ்னாலதான் சார். ஒரு வருஷம் பெயிலாக்கிட்டு அடுத்த வருஷம் பாஸ் போட்டுருவாங்க. நான் எல்லா கிளாஸ்லயும் பெயில். எல்லா கிளாஸ்லயும் பாஸ். பத்தாவது முடிக்கும்போது பரசுராமுக்கு இருபத்திரண்டு வயது. ரயில்வேயில் வேலைக்குச் சேர்ந்தபோது இருபத்திமூன்றாவது வயது. எந்த ஓட்டம் பாட்டத்திற்கும் வீடு திட்டி துரத்தியதோ அந்த ஓட்டம் பாட்டமே அவனுக்கு வேலை வாங்கிக் கொடுத்தது.

ரயில்வேயில் வேலை கிடைத்ததும் பரசுராம் வீட்டுக்கு போகவில்லை. அத்தை வீட்டிற்கு போனான். உன் பொண்ணைக் குடுக்கறியா என்று கேட்டான். வேலை உறுதியானதும் பெண் கொடுத்தார்கள். இருபது சவரன் நகை போட்டார்கள். இன்டர் ஸ்டேட் ரயில்வே மீட்டிங் பரசுராம் நான்கு தங்க மெடல்கள் வாங்கினான். அந்த நான்கையும் அடகு கடையில் வைத்து புல்லட் மோட்டார் சைக்கிள் வாங்க ஆசைப்பட்டான். ஆனால் அந்த மெடல்கள் தங்கமில்லை. தங்கத்தில் தோய்த்த வெள்ளி. ஒரு சர்க்கஸில் கூண்டுக்குள் மோட்டார் சைக்கிள் ஓட்டுவதை வெகு அருகே அமர்ந்து பார்த்ததிலிருந்து அவனுக்கு மோட்டார் சைக்கிள் ஆசை அதிகமாகிவிட்டது. மனைவியின் நகைகளை அவள் பகலில் தூங்கும்போது திருடிக் கொண்டு போய் அடமானம் வைத்து பழைய மோட்டார் சைக்கிள் வாங்கினான்.

மனைவி விஷயம் தெரியாமல் போலீஸுக்கு சொல்ல மிகப் பெரிய அவமானமாகிவிட்டது. இப்படிப்பட்ட திருடனுக்கு பொண்ணு குடுத்ததைவிட வெட்டிப் போட்டுக்கலாம். பாழுங் கிணத்துல தள்ளி விட்டிருக்கலாம் என்று அத்தை கத்தினாள். பகலில் தூங்கிய தன் பெண்ணைக் கண்டபடி திட்டினாள். மறுநாள் காலையிலிருந்து பரசுராம் மனைவியைக் காணவில்லை.. மாலையில் அவளைக் கிணற்றில் மிதப்பதைக் கண்டு பிடித்தார்கள். போலிஸையும், தீயணைப்புப் படையினரையும் வைத்து இரவு நேரத்தில் எடுத்தார்கள். அம்மா திட்டியதால் தற்கொலை என்று வழக்கை முடித்தார்கள். ஆனால் பரசுராமுக்கு அன்றிலிருந்து கிணறு என்றால் பயம். இரவு என்றால் பயம். பேய் பிசாசு என்று யாராவது சொன்னால் பயம்.

ஒவ்வொரு முறையும் குதிக்கும் போதும் செத்துப்போன மனைவியை மனசுள் நினைத்துக் கொண்டு தான் வேலை துவங்குவான். என்றோ ஒரு நாள் அப்படி தாவுகிறபோது அவன் மனைவி, செத்துப்போன அத்தைப் பெண் கண்ணெதிரே தோன்றுவாள் போதும் குதிச்சது... வா போலாம் என்று கூப்பிடுவாள் என பயந்தான். ஒவ்வொருமுறை தாவும்போதும் காப்பாற்றுவது அவளே ஆயினும் ஏதோ ஒரு முறை காப்பாற்றாது கை கட்டிக்கொண்டு இருந்து விடலாம் என்று அவனுக்கு தோன்றும். தாயே கை விடாத என்று தான் ஒவ்வொரு வேலையின் போதும் கும்பிடுவது அவன் வழக்கம்.

இந்த முறை மோட்டார் போட் ஓட்ட வேண்டும் என்று சொல்கிறார்கள். மோட்டார் போட் ஓட்டியதில்லை. ஏரி, குளத்தில் வேலை செய்ததில்லை. கிணற்றில் விழுந்து செத்துப் போனவள் ஏரியில் தோன்றலாம். பாதி ஓட்டும்போது திடீரென்று நீரிலிருந்து எழுந்து வந்து ஓட்டுனவரைக்கும் போதும் வா என்று நீருக்குள் இழுத்து விடலாம். நகை திருடியதால் தண்ணீரில் விழுந்து செத்துப் போனவள் தண்ணீருக்குள் அவனை இழுத்துக் கொள்ளலாம்.

இப்போதே கெஞ்ச வேண்டும். ''நாளைக்கு மோட்டார் போட் ஓட்டணும் தாயே. எந்தக் கெடுதியும் இல்லாத என்னைக் காப்பாத்தணும் தாயே'' என்று கெஞ்ச வேண்டும். பரசுராமுக்கு நாளைய வேலை குறித்து பயம் வந்தது. இன்

னும் கொஞ்சம் குடிக்க வேண்டும் என்று தோன்றிற்று.

''ஒரு குவார்ட்டர் இருக்கா?'' புரொடக்ஷன் ஆளைக்கேட்டான்.

''உனக்கு தான் குடுத்துட்டேனே..''

''நெஞ்சு நோவுதுப்பா. இன்னொரு குவார்ட்டர் குடு.''

''நடு காட்ல கேட்டா எப்படி?'' வேற ஆளுக்கு வச்சிருக்கோம். அவங்க கேப்பாங்கல்ல... நீ எதுக்கும் மேனேஜரை ஒரு வார்த்தை கேட்டுக்க...

''சார். மேனேஜர் சார். போட் கிளப் ஆள் டிரிங்க் சாப்பிடுவாராம். புரொடக்ஷன்ல ஒரு குவார்ட்டர் குடுக்க சொல்லுங்க.''

''குடுப்பா'' உத்தரவு வந்தது.

''அவருக்கு மட்டும் குடுத்தா.. என்னையல்ல கூட இருக்க சொல்றாரு. எனக்கும் ஒரு குவார்ட்டர் குடுக்க சொல்லுங்க. எப்படியும் பேசி நான் பர்மிஷன் வாங்கி தரேன்.''

இன்னொரு குவார்ட்டரும் கொடுக்கப்பட்டது. இரண்டையும் பையில் போட்டுக் கொண்டான். ஒரு குவார்ட்டரை உடைத்து இரண்டு மிடறுகுடித்தான்.

ஜனங்கள் பரபரப்பானார்கள். கேமிராவுக்கு கர்சீப் ஆட்டப்பட்டது: ஜீப் டமால் என்று வெடித்து நூறடி உயர நெருப்பு குடை போல் எழுந்தது. அந்த நெருப்பின் நடுவே பரசுராமின் அத்தைப் பெண் மூன்று வண்டிக்கு வெறும் முகம் மட்டும் காட்டி சிரித்து விட்டு போனாள். அது நிஜமா பிரமையா என்று தெரிய வில்லை.

''அப்ப நான் வரேங்க'' வெடித்தது பார்த்ததும் பாலசுப்பிரமணியம் நாற்காலி விட்டு எழுந்தான். ''அட இருங்க.. நான் வண்டி ஏற்பாடு பண்றேன்'' பரசுராம் அவனை அவசரமாகத்தடுத்தார்.

அவனுக்கு மோட்டார் படகை ஒரு முறை பார்த்து விட்டு வந்தால் தேவலாம் என்று தோன்றியது.

''ஆபீஸரு போட் காமிக்கிறேன்றாரு. ஒரு வண்டி குடுங்களேன்'' டிரைவரோடு ஒரு பழைய ஜீப் கொடுத்தார்கள். வழி நெடுக வின்செண்ட் தென்படுகிறானா என்று பாலசுப்ரமணியம் பார்த்துக் கொண்டே வந்தான். வின்செண்ட்டையும் காணோம். விமலாவையும் காணோம். அந்தப் பையனையும் காணோம்.

''பர்மிஷன் வாங்காத நீங்க மோட்டார் போட் பாத்து என்ன புண்ணியம்.''

''அவங்க வாங்கறபடி வாங்கிக்குவாங்க. நாம பாக்கறபடி பாத்துக்குவமே.''

நுழைவு டிக்கெட் வாங்காமல் இரண்டு பேரும் உள்ளே நுழைந்தார்கள்.

ஏரியில் நாலைந்து பெடல் போட்டுகள் நகர்ந்து கொண்டிருந்தன. உள்ளங்கையை நெருக்கமாகக் குவித்து அதில் நீலத்தண்ணீர் ஊற்றினால் எப்படி இருக்குமோ.. அந்த வளைவாய் அந்த அமைப்பாய் அந்த ஏரி இருந்தது. பெரிய மலையில் உள்ளங்கைக் குவியலில் நீர் நிறைந்து இருப்பதாக பரசுராமுக்குப் பட்டது.

''அதோ அந்த மோட்டார் போட்ல வராரே அவருதான் இங்க படகு இன்சார்ஜ். ஒரு அஞ்சு, பத்து குடுத்தீங்கன்னா மோட்டார் போட் பத்தி எல்லாம் சொல்லிக் குடுத்துடுவாரு. மோட்டார் போட் அருகே வந்தது. சூசைநாதன் அதிலிருந்து கீழே இறங்கினான்.

''சூசை... இவரு சினிமா பார்ட்டிப்பா. ஸ்டண்ட் ஆளு.. மோட்டார் போட் ஓட்டணுமாம். கத்து குடுக்கறியா?''

''முதல்ல டிக்கெட் வாங்க சொல்லுங்க.'' சூசைநாதன் ஆறேழு தமிழ்ப்படத்தில் மூன்று நான்கு இந்திப் படத்தில், பத்துப் பன்னெண்டு தெலுங்குப் படத்தில்

நடித்திருக்கிறான். அவன் நடிப்பு, போட் ஓட்டுவது மட்டுமே. மற்ற பார்ட்டிக்கு போட் ஓட்டினால் ஐந்து ரூபாய் டிப்ஸ் கிடைக்கும். சினிமாக்காரர்களுக்கு ஓட்டினால் நூறு இருநூறு கிடைக்கும்.

ஒரு தெலுங்கு படத்தில் நடு ஏரியில் படகோடு படகை மோதச் சொன்னார்கள். சூசைநாதன் மறுத்து விட்டான். ஐநூறு ரூபாய் தருகிறேன் என்று சொன்னார்கள். மோதிக் காட்டினான்.

போட் இடிச்சியா...வேலை கிடையாது. போ என்று ஆபீஸ் பயமுறுத்தியது.

சூசை அரசு ஊழியனல்ல. ஒப்பந்த ஊழியன். ஒரு நாளுக்கு போட்டைத் தள்ளி விடுவதற்காக அரசாங்கம் அவனுக்கு ஐந்து ரூபாய் கூலி கொடுத்தது. வாரத்துக்கு ஒரு முறை பட்டு வாடா செய்தது.

ஆனால் கரசு உல்லாச பயணிகள் தான் கொடுப்பார்கள். வெள்ளைக்காரப் பெண்கள் பத்து இருபது என்றுகூட கொடுப்பார்கள். பம்பாய்க் காரர்கள் ஐம்பது ரூபாய் கொடுப்பார்கள். தமிழர்களிடம் காசு வாங்குவது தான் கஷ்டம்.

ஒரு போட்டுக்கு தான் இருபத்தஞ்சு ரூவா வாங்கறீங்களே. அப்புறம் நீ ஏன் கை நீட்டறே. மீட்டருக்கு மேல அஞ்சு ரூவாயா? மெட்ராஸ் ஆட்டோ மாதிரி ஆயிப் போச்சுப்பா ஊட்டி போட்டு'' அலுத்துக் கொண்டே இரண்டு ரூபாய் கொடுப்பார்கள்.

சீஸன், ஞாயிற்றுக் கிழமைகளில் இருநூறு முன்னூறு கூட டிப்ஸ் கிடைக்கும். இன்னும் சீஸன் சரியாக ஆரம்பிக்கவில்லை. இன்று காலை ஐந்து ரூபாய் தான் சம்பாதிக்க முடிந்தது. போட்டைத் தள்ளி ஒரு ஜோடியை இரண்டு முறை போட்டோ எடுத்துக் கொடுத்தான். அநேகமாய் போட் ஓட்டுகிறவர்கள் எல்லோரும் காமிராவோடு வருகிறார்கள். புருஷன் மனைவியாய் போட்டில் அமர்ந்து போட்டோ எடுக்கச் சொல்வார்கள். போட்டோ எடுக்க சில சமயம் கூட ஐந்து ரூபாய் கொடுப்பார்கள்.

சூசை ப்ளஸ் டூ படித்திருக்கிறான். தமிழ், தெலுங்கு, இந்தி, கன்னடம், மலையாளம், இங்கிலீஷ் என்று ஆறு பாஷை பேசுவான். சில பிரெஞ்ச் வார்த்தைகள் கூட தெரியும். சொந்த பாஷை பேசினால் எல்லா மனிதர்களுக்கும் சந்தோஷம். இந்த ஏரிதான் அவனுக்கு சோறு போடுகிறது. இந்த நாலு மாச சம்பாத்தியம் தான் வருஷம் முழுக்க ஓட வைக்கிறது. நாலு மாதத்தில் பதினைந்தாயிரம் சம்பாதித்து விட்டால் போதும்... மற்ற மாதங்களில் கேரட் பயிரிட்டு சிங்கோனா பட்டை உரித்தும் சம்பாதித்துக் கொள்ள முடியும்.

இந்த ஆள் சினிமாக்காரன் என்றால் இருநூறு முன்னூறு கறந்து விடவேண்டும். ஐநூறு என்று ஆரம்பிக்க வேண்டும். அறுபத்தைந்து ரூபாய் டிக்கெட் வாங்கிக் கொண்டு ஒரு ரவுண்டு போவதற்காக சூசை படகில் பரசுரமாம் ஏறிக் கொண்டான். படகு ஆடியது. பயந்தான். உட்கார்ந்த பிறகும் லேசாய் குலுங்கியது. படகில் உட்கார்ந்த போதும் படகு கீழே நீரில் யாரோ மெல்ல படகை தூக்குவது போல் தெரிந்தது.

''இந்த ஏரில பேய் பிசாசுங்க உண்டா?'' பரசுராம் முதல் கேள்வி கேட்டான். பார்ட்டி பயந்த பார்ட்டி போல இருக்கு. ஸ்டண்ட் ஆளுன்னாரு பாலு உள்ள உக்காந்ததும் பேய் இருக்கான்னு கேக்கறானே. இல்லை என்று சொல்லி விட்டால் நட்பு வளராது. காசு வாங்க நட்பு வளர வேண்டும். நட்பு வளர பொய் பேசவேண்டும். ''எப்பனா தென்படுங்க. எப்பவும் வராது'' சூசை மோட்டார் போட்டைக் கிளப்பினான். பரசுராமுக்கு பயம் குலையைக் கவ்வியது.

மோட்டார் போட் சீறிக் கொண்டு நீரின் நடுவே கிழித்துப் பறந்தது. பரசுராம்

இரண்டு கையாலும் உட்கார்ந்திருக்கும் பலகையைக் கெட்டியாய் பிடித்துக் கொண்டான்.

''ரொம்ப ஸ்பீடா போகாதப்பா என்று கத்தினான் சூசைக்கு பார்ட்டியை பயமுறுத்தி பார்க்க வேண்டும் என்ற ஆசை வந்தது. இடதும், வலதும் கைப்பிடியைத் திருப்ப மோட்டார் போட் வளைந்து வளைந்து பாம்பு மாதிரி ஓடியது. ஐயோ.. ஐயோ நான் செத்துருவேன்.. பரசுராம் பயம் தாங்காமல் அலறினான். பட்டனை அழுத்த டீஸல் இன்ஜின் தடதடவென்ற சத்தத்துடன் நின்றது. மோட்டார் போட் சத்தமின்றி அன்னம்போல் நீரைக் கிழித்துக் கொண்டு போயிற்று. பயம் போக பரசுராம் பாக்கெட்டிலிருந்து குவார்ட்டர் பாட்டில் எடுத்தான். ஒரு மடறு குடித்தான். நீங்க சாப்பிடறீங்களா? கவனமாய் திரும்பி சூசையிடம் நீட்டினான்.

''நீங்களே கொஞ்சம் தான் வச்சிருக்கீங்க எனக்கு வேணாம்.''

''இன்னொரு சப்பை வச்சிருக்கேன். நீங்க சாப்பிடுங்க'' நட்போடு பரசுராம் அழைக்க பிடியை விட்டு விட்டு நடு போட்டுக்கு சூசை நடந்து வர படகு இடதும் வலதும் ஆடியது. ''ஐயோ.. ஆடுதே..'' பரசுராம் மீண்டும் அலறினான்.

''லேசா ஆடும்ங்க. ஒன்னும் ஆவாது.''

''கவுந்துருச்சுன்னா.''

''ரொம்ப ஆட்டினா தாங்க கவுரும். இந்த எட்ஜ் வரைக்கும் ஆட்டலாம். ஒன்னும் ஆவாது. இப்ப ஓட்டறேம்பாருங்க'' பரசுராமின் எதிர் பலகையில் உட்கார்ந்து கொண்டு போட்டின் விளிம்புகளைக் கையால் பிடித்தபடி சூசை ஆட்டிக் காட்டினான். பரசுராம் இரைப்பையில் உள்ள விஸ்கி குலுங்கியது. வேகமாய் குடலுக்குள் இறங்கியது. ''ஐயோ ஆட்டாதீங்க.. எனக்கு தலை சுத்துது.''

''ரொம்ப சாப்பிட்டீங்களா?''

''குவார்ட்டர் தான் சாப்பிட்டேன்.''

''தரையா இருந்தா ஒரு ஃபுல்பாட்டில் சாப்பிட்டு கூட ஸ்டெடியா நிப்பேன். எனக்கு தண்ணினா பயம்.''

''எங்க தாய் ஒன்னும் செய்யமாட்டா. பயப்படாதீங்க.''

''தாயா?''

''இந்த ஏரி எனக்கு தாய் மாதிரி.''

''ரொம்ப நாளா இருக்கீங்களா?''

''பொறந்து வளர்ந்ததே இங்கதான் உங்களுக்கு எந்த ஊரு?''

''மெட்ராஸ், இது மொத்தமும் நான் சாப்பிட்டுரட்டுமா?''

மொத்த பாட்டிலில் காலே அரைக்கால் விஸ்கி இருந்தது. சாப்பிட்டுடுங்க. நான் இன்னொன்னு வச்சிருக்கேன் பாக்கெட்டிலிருந்து உருவி மூடியை உடைத்து திறந்து சூசைக்கு காட்டி ஏரியில் கொஞ்சம் தெளித்து வாயில் விட்டுக் கொண்டான் சூசை பலகையிலிருந்து கீழே இறங்கி படகின் அடிப்பக்கம் குத்திட்டு உட்கார்ந்து மொத்த விஸ்கியும் வாயில் விட்டுக் கொண்டான். விஸ்கியின் காரம் காதுகளையும் கண்களையும் உச்சி மண்டையையும் உடனே தாக்கியது. உள்ளே ஒரு சாராய சுகம் பரவியது.

''ஏன் பேய் இருக்கான்னு கேட்டீங்க?''

''பழைய நீர் நிலையில பேய் இருக்கும்னுவாங்க.''

''எதுனால இப்படி?''

''எவனா வுழுந்து செத்துருப்பான்ல..?'' நீரில செத்தவன் நேர மேல போமாட்டான். நின்னு வாழ்ந்துட்டுதான் போவான்னுவாங்க.''

''நான் கேள்விப்பட்டதில்லையே.''

''அது நிஜம். என் அனுபவம்'' பரசுராம் மனைவியை நினைத்துக் கொண்டார்.

''அப்படி பாத்தா இங்க ஆறேழு பேய் இருக்கணும்?''

''ஏன் யாராவது செத்துருக்காங்களா?''

''ரெண்டு மாசம் முன்னாடி ஹாசன்ங்கற ஊர்லேர்ந்து ஒரு குரூப் வந்தது. பாலிடெக்னிக் பசங்க. நாலஞ்சு போட் எடுத்துட்டு போச்சுங்க. ஒரு போட்டு இன்னொரு போட்டை துரத்துச்சு. துடுப்பு போட்டு தான். கடைசில உக்காந்திருந்த பையன் அடுத்த போட்டை எட்டி அப்பால தள்ளினான். லொடுக்குன்னு தண்ணில விழுந்துட்டான். வெளிய வரவேயில்லை. மறுநாள் தான் பாடி மிதந்துச்சு.

''குதிச்சு தேடியிருக்கக் கூடாதா?''

''நாப்பத்தஞ்சடி ஆழம். அதுக்கு கீழே சேறு. இந்த தண்ணில நீஞ்சறதே கஷ்டம். ரொம்ப பழைய ஏரில்ல.. இலைங்க வுழுந்து வுழுந்து தண்ணி கனமே கூடிப் போச்சு.''

''நீங்க எதுனா பேய் பாத்திருக்கீங்களா?''

''அது சொல்லக்கூடாதுங்க.'' சூசை சொல்லிவிட்டு யோசிக்க துவங்கினான். நம்பும்படியாக ஒரு பொய்யை யோசிக்க துவங்கினான்.

''பரவால்ல... சொல்லுங்க...''

''பேயா என்னான்னு தெரியலை. முழுநிலா இருக்கற ராத்திரில பொண்ணுங்க குளிக்க வருதுங்க.''

''பொண்ணுங்களா?''

''தேவதை மாதிரின்னு வச்சுக்கங்களேன். வெள்ளையா.. புகை மாதிரி கரையாண்ட நடமாட்டம் இருக்கும். தபக் தபக்குன்னு தண்ணில நீச்சலடிக்கிற சத்தம் கேட்கும் சில சமயம் அந்தக் கரைல இருக்கற படகை இந்தக் கரைக்கு கொண்ணாந்து வுட்ரும்.''

''ஐயோ.. அப்புறம்?''

''பல பலன்னு விடியற நேரத்துல காணாத போயிடும். இத வெளிய சொல்லாதீங்க. நல்லதில்லை.''

''நான் சொல்ல மாட்டேனே.. வெறும் பொண்ணுங்க மட்டும் வருமா? இல்ல ஆணும் பொண்ணுங்களுமா வருமா?''

சூசைக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. ஒரு பெண்பேய்க்கு புருஷன் பேய் இருப்பது தப்பில்லை என்று தோன்றியது.

''ஆம்பளை, பொம்பளை எல்லாம் வரும். பத்து பதினைஞ்சு பேராதான் இருக்கும்.''

''எந்தப் பக்கம்.''

''அதோ அந்தப் பக்கம். ரெண்டு மரத்துக்கு நடுவ இடைவெளி இருக்கே. அங்கதான் இறங்குவாங்க. பகல்ல போட்டு போனாக்கூட அங்க முட்டிக்கினு நிக்கும். ஏதோ இழுத்து பிடிச்ச மாதிரி நகராத நிக்கும்.''

பரசுராம் அந்த இடத்தை ஆவலும், பயமுமாய் பார்த்தான். இரண்டு மரங்க

ளுக்கு நடுவே இயற்கையாய் அமைந்த படித்துறை போல ஒரு நாற்பதடி அகல சரிவு இருந்தது.

''பகல்ல கூட முட்டிட்டு நிக்குமா?''

''ஆமா...'' சூசை அழுத்தம் திருத்தமாய் சொன்னான்.

ஒரு கரையோர மரம் விழுந்து அடியில் தங்கி விட்டது. அந்த சரிவில் நீருக்கடியில் படுத்துக் கிடக்கிறது. அந்தப் பக்கம் போகும் படகுகள் மரத்தில் முட்டி முன்னேற முடியாமல் தவிக்கும். பெடல் போட்டை பின்புறமாய் சுழற்றி வெளியே வர பலருக்கு தெரியாது. சூசைதான் போய் கயிறு கட்டி இழுத்து வருவான். அப்படி இழுத்து வந்ததற்கு பத்து இருபது வாங்கி விடுவான். அந்தக் காசுக்காகவே எந்தப் படகு அந்தப் பக்கம் போனாலும் சூசை தடுப்பதில்லை. அதே சமயம் அந்தப் பக்கம் போ என்று வழி காட்டுவதும் இல்லை. எப்படியும் சீஸனில் தினம் இரண்டு மூன்று படகுகள் அங்கேயே சிக்கிக் கொள்ளும். சூசைக்கு காசு சேரும். இப்போது காசு வேறு விதமாய் வர முற்பட்டிருக்கிறது. பேய் கதை சொன்னதற்கே நூறு ரூபாய் வாங்கி விடலாம் என்று தோன்றியது.

''ஸ்டண்ட் ஆளுன்றீங்க - பேய்க்கு பயப்படறீங்க'' சூசை பலகையில் உட்கார்ந்து பாட்டிலை நீருக்குள் நழுவ விட்டான்.

''நான் ஸ்டண்ட் ஆளு தான். ஆனா பேயோட என்னா பண்ண முடியும். மனுஷாள் எகிறினா பளார்னு ரெண்டு அறை வுட்டு அடக்கிடுவேன். பேய் கிட்ட மனுஷாள் சண்டை போட முடியுமா? நான் ஒன்டி ஆளா பத்து பேரை அடிப்பேன். ஒரு பேய்க்கிட்ட நூறு பேர் சேர்ந்தாலும் சண்டை போட முடியுமா?''

''அது வாஸ்தவம். இன்னொரு மிடக்கு தரீங்களா?''

பரசுராமிடம் பாட்டிலுக்காய் சூசை கை நீட்டினான். படகு ஆடியது. பரசுராம் ஒரு மிடறு குடித்துவிட்டு சூசையிடம் பாட்டில் கொடுத்தான். அவனுக்கு பேய்களை பார்க்க வேண்டும் போலிருந்தது. பயமாகவும் இருந்தது.

சூசைக்கு இந்த முறை விஸ்கி பெரிய பாதிப்பை ஏற்படுத்தவில்லை. ஆனால் புத்தியை மெல்ல தாலாட்ட ஆரம்பித்து விட்டது. மூளையின் உட்புறசெல்களை வருடிக் கொடுத்தது.

''உங்களுக்கு போட் பத்தி பயம் போகணும். பயம் போனா தான் நாளைக்கு நீங்க போட் ஓட்ட முடியும். இது செல்ப் ஸ்டார்ட். இது அழுத்திக்கிட்டே கொஞ்சம் ஆக்ஸிலேட்டர் குடுத்தீங்கன்னா பிளேட் சுத்த ஆரம்பிச்சிடும். ஆக்ஸிலேட்டர் குடுக்க குடுக்க ஸ்பீடாகும். படகு மறுபடி சீராகியது. திடீரென்று முன்னோக்கி தாவித் தாவி பறந்தது. பரசுராம் வயிறு தனியே ஆடியது. இரண்டு பக்க விளிம்புகளையும் பிடித்துக் கொண்டு ஐயோ.. ஐயோ என்றான். அவன் கூச்சல் சூசைக்கு சந்தோஷமாக இருந்தது.

ஸ்டண்ட் ஆளா.. சாவடிச்சிடறேன் வா.. என்று தேவையற்ற ஒரு வன்மம் வந்தது. அந்த வன்மத்துக்கு விஸ்கி காரணம். ஏரியின் ஒரு முனைக்கு போய் வட்டமடித்து திரும்பியது.

பரசுராம் காது வழியாக விஸ்கி வழிந்து விடுமோ என்று பயந்தான். இப்போது எதிர்ப்பலகையைப் பிடித்துக் கொண்டான். போட் நேராகி சீறிப் பறந்தது. இரண்டு பக்கமும் நுரையோடு அலைகள் எழுந்தன.

எழுந்த அலை அருகிலிருந்த துடுப்பு போட்டை ஆட்டியது. துடுப்பு போட்டியில் உள்ளவர்கள் ஒருவரையொருவர் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். எப்படி போறாம் பாரு என்று திட்டினார்கள். விஸ்கியின் வேகத்தில் வளைந்து வளைந்து சூசை ஓட்டினான். தன் திறமை முழுவதும் காண்பித்தான். பரசுராம் உடம்புக்

குள்ளே இந்தக் குலுங்கல் பல மாற்றங்களை ஏற்படுத்தின. மூளை திரும்பிக் கொண்டது போல் இருந்தது. இருதயம் இடம் மாறியது போல் தோன்றியது. குடல்கள் முறுக்கிக் கொண்டன. முதுகெலும்பில் வலி ஏற்பட்டது.

போறுமா என்று சூசை கேட்டான்.

போறும் என்று சொல்லக்கூட பரசுராமால் முடியவில்லை. முன் மரக்கட்டையைப் பிடித்தபடிகண்கள் சொருகிக் கிடந்தான்.

படகைக் கரையோர டயரில் இடித்து நிறுத்தி விட்டு சூசை மரமேடைக்கு தாவினான். பரசராமுக்கு கால் எழும்பவில்லை. மரமேடையைப் பிடித்துக் கொண்டு கிட்டத்தட்ட குழந்தை போல தவழ்ந்து ஏறினான். எழுந்து நின்றான். பொத்தென்று விழுந்தான். சூசை தூக்கிவிட தடால் தடால் என்று பெரும் அடி எடுத்து வைத்து புல்மேடு ஏறினான். ஏரியைப் பார்த்து உட்கார்ந்தான் மல்லாக்க சாய்ந்தான். பூமி வானத்தோடு உருண்டது. கண்கள் மூடிக்கொள்ள உள்ளுக் குள்ளே உருண்டது.

பரசுராம் எங்கோ அழைத்து போகப்பட்டான்.

''என்னாங்க ஆச்சு..'' அலுவலகத்திலிருந்து இறங்கி வந்த பாலு மல்லாந்து கிடந்த பரசுராமை உலுக்கினான்.

'அவரை எழுப்பாதீங்க. ஓவர் தண்ணி. போட்டை சுழட்டி சுழட்டி ஓட்டினேன்... ஆடிப் போயிட்டாரு. அவரு அப்படியே கிடக்கட்டும். அரை மணியில எழுந்துருவாரு.''

''எழுந்துக்கலேன்னா...'' பாலுவுக்கு கவலை வந்தது.

''தூக்கிக் கொண்டு போய் டைனிங் ஹால்ல போட்டுருவம். குடிக்கிற ஆள் தான். எழுந்துருவார். பாலுவின் மேனேஜர் ஜன்னல் வழியே பார்ப்பது தெரிந்தது.

மெட்ராஸ் வுடுங்கன்னா கூட நான் வுடமாட்டேன்யா. நாளைக்கு ஞாயித்துக் கிழமை. நிறைய டூரிஸ்ட் கும்பல் இருக்கும். இவங்க ஷூட்டிங்கெல்லாம் சரி வராது.''

''காலையிலே வச்சுக்கலாமா சார்.''

''இதெல்லாம் வீண் வேலை. எட்டு மணிக்கே டூரிஸ்ட் கும்பல் வரும். எதுக்கும் என்னை வந்து பாக்க சொல்லு. இதெல்லாம் நீ பேசி மாட்டிக்காத. ஏடாகூடமா எதாவது பண்ணா ராமேஸ்வரத்துக்கு தூக்கி போட்டுருவாங்க. அப்புறம் வாழ்க்கை முழுக்க ஈ தான் ஓட்டிக்கினு இருக்கணும்.

பாலுவுக்கு பரசுராமைக் கவனிப்பதா அந்த யூனிட்டை தேடிப் போவதா என்று தெரியவில்லை.

வேணும்னா வருவாங்க வுடுடா. என்று வின்செண்ட் சொல்லியிருப்பான். வின்செண்ட் எங்கிருக்கிறான் என்று தெரியவில்லை. போட் கிளப் எதிரே உள்ள பூத்தில் தான் அந்த விமலா வேலை செய்கிறாளாம். விமலா அந்த பூத்துக்கு வந்து விட்டாளா என்று தெரியவில்லை. விமலா பூத்துக்கு வந்திருந்தால் வின்செண்ட் வீட்டுக்கு போயிருப்பான். அவள் வரவில்லையென்றால் எங்கோ நின்று அவளைக் கண்காணித்துக் கொண்டிருப்பான். பூத் எப்படி இருக்கிறது என்று பார்த்தால் தெரிந்து விடும். படிகள் ஏறி தெரு தாண்டி பூத் பக்கம் விரைய பூத்துக்குள் இருந்து பேச்சுக்குரல் கேட்டது.

தடக்கு தடக்குன்னு பூட்டிட்டு போனா என்ன அர்த்தம். நான் நாலு காசு சம்பாரிச்சாதானே உனக்கு சம்பளம் குடுக்க முடியும்.

''நீங்க தான் சொன்னீங்க. அந்த மானேஜர் வந்தா பூட்டிட்டு போயிடுன்னு.

ஆண் குரலும் பெண் குரலுமாய் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. பூத் கதவு சாத்தப் பட்டிருந்தது.

ஒயரைப் புடுங்கி வுட்டுருன்னுதான சொன்னேன். அதுக்கு மேல அவன் காத்திருந்தாதானே அவனைக் கூட்டிட்டு போ சொன்னேன். நீ ஒயரே புடுங்காத அவனைக் கூட்டிட்டு போயிட்டியே... உண்மையிலேயே அவன் வந்தானா.. அல்லது இதுதான் சாக்குன்னு நீ பூட்டிட்டு போயிட்டியா?'''

''நீங்க நம்பினா நம்புங்க.. நம்பாட்டி போங்க.''

''உங்கப்பா கெஞ்சினாரேன்னுதான் உனக்கு வேலை போட்டு குடுத்தேன். பூட்டிட்டு எங்க போன?''

வீட்டுப்பக்கம் போயிருந்தேன்.

''நான் உங்க வீட்லேர்ந்து தான் வரேன். உங்க வீட்டுக்கு நீ வரலை.''

''நான் வீட்டுக்கு போனேன்னா சொன்னேன். வீட்டுப் பக்கம்னு தான சொன்னேன்.''

''உன் நடவடிக்கை சரியில்லை. ஆரம்பத்துல ஒழுங்கா இருந்த.. இப்ப கெட்டு போயிட்ட.''

''இந்தாங்க டெலிபோன் சாவி. நான் வேலைக்கு வரலை. பெண் குரல் கோபமாய் அதட்டியது.

''நீ இப்படி தடால்னு வுட்டுட்டு போனா என்ன அர்த்தம். ஆண் குரல் கோபம் கீழிறங்கியது.

''உங்களண்ட வேலை செய்ய எனக்கு இஷ்டம் இல்லைன்னு அர்த்தம்.

''நல்லபுத்தி சொன்னா கோபப்படுவாங்களா?''

''நீங்க யாரு எனக்கு புத்தி சொல்றதுக்கு''

''நான் உன்னைப் பத்தி ரொம்ப உயர்வா வச்சிட்டிருக்கேன். அதைக் கெடுத்துராத விமலா.''

''எதுக்கெடுத்தாலும் திட்டினா நான் என்னா செய்றது...''

''நான் ஏன் இங்கயே இருன்னு சொன்னேன் தெரியுமா. மேல இருக்க ஓட்டல்ல இன்னும் நாலு நாளைக்கு எஸ்.டி.டி. வேலை செய்யாது. லைன் ஃபால்ட் நம்ம எஸ்.டி.டி. வேலை செய்யும்.''

''அதனால...?''

''அங்க இருக்கற சினிமா குரூப் இங்கதான் போன் பேச வரும். ரொம்ப சுலபமா ஒரு நாளைக்கு நாப்பது அம்பது கால் பண்ணும். நீ பாட்டுக்கு பூட்டிட்டு போயிட்டா... ஆறேழு மணி வரைக்கும் அசையாத இரு. சினிமா கும்பல் போன் பேச வரும்போது நான் வந்து பாத்துக்கறேன். முடிஞ்சா பதினோரு மணி வரைக்கும் இரு. இன்னைக்கு கூட பதினைஞ்சு ரூபா தரேன்.''

சட்டென்று பூத்தின் கதவு திறந்தது.

''என்னாங்க... என்ன வேணும்?''

கதவு திறந்து வந்தவன் கொஞ்சம் அதட்டலாய் பாலுவிடம் விசாரித்தான்.

''சினிமா யூனிட் மேலயா தங்கியிருக்கு?''

''ஆமா. நீங்க போட் கிளப் ஆள் இல்லே... வணக்கம் சார். ஆனா இப்ப யாரும் இருக்க மாட்டாங்களே... எல்லாரும் கேத்தி தாண்டி ஷூட்டிங் போயிருக்காங்களே. ஆறு மணிக்கு தான் வருவாங்க. என்னா சார் சமாச்சாரம்?'' சற்று முன் போட்ட கூச்சலை மறந்து விட்டு மிகவும் பிரியமாய் கேட்டான்.

''நாளைக்கு போட் கிளப்புல ஷுட்டிங் எடுக்கணுமாம். அது பத்தி பேச ணும்.''

''வழுக்கை தலையா ஒரு பெரியவர் இப்ப தான் கார்ல போறார். சரசரன்னு நடந்தீங்கன்னா புடிச்சிடலாம்.''

''கண்ணாடி போட்டிருந்தாரா?''

''தெரியலையே...'' அந்த ஆள் திகைத்தான்.

''ஆமாமா... கண்ணாடி போட்டிருப்பாரு. அவரு தான் புரொடக்ஷன் மேனேஜர். சீனிவாசன்னு பேர்.''

உனக்கெப்படி தெரியும் என்பது போல் அந்த ஆள் விமலாவை திரும்பிப் பார்த்தான்.

''ரெண்டு தடவை இங்க போன் பண்ண வந்தார்.''

''அவர் புரொடக்ஷன் மேனேஜர்னு உனக்கு எப்படி தெரியும்.''

''அங்க பாத்தேன்'' விமலா வாய் தப்பினாள்.

''எங்க?''

விமலா பேசாதிருந்தாள்.

''எங்க?'' அந்த ஆள் கத்தினான்.

''கேத்தில பாத்தேங்க. ஏன் கத்தறீங்க?''

''கேத்தி வரைக்குமா போயிருந் த..'' அந்த ஆள் மறுபடி கோபமானான்.

''ஆமா... போட் கிளப்லேர்ந்து நாலு பேர் போனாங்க. இவரும் போனாரு. நானும் ஆளுங்க துணையிருக்கேன்னு போனேன்.''

பாலு சடாரென்று தன் முன் விழுந்த பொய்க்கு திகைத்தான்.

''என்னாங்க இவங்க சொல்றது உண்மையா?''

''ஆமாங்க. ஷுட்டிங் பாக்க பத்து பேர் கும்பலா போனம் - இவங்களும் கும்பலா வந்தாங்க. எங்களோடயே திரும்பிட்டாங்க.''

''லேடீஸ் யாரும் வரலியா?''

''வந்திருந்தாங்க சார். வாத்தியார் பொண்ணு சாந்தகுமாரியும் வந்திருந்துச் சு.''

''யாரு அந்த கணக்கு வாத்தியாரா? கோட்டு போட்டு வேஷ்டி கட்டுவாரே. அவரு பொண்ணா? அதை முன்னாடியே சொல்லக்கூடாது நீ? ஏன் வூட்டுப்பக் கம்னு பொய் சொன்னே?''

''வூட்டுப்பக்கம் போலாம்னுதான் போனேன். பஸ்லே இவங்க கும்பலா ஏறினாங்க. இவங்க கும்பலா போறது பாத்துட்டு நானும் இவங்க பின்னாடியே போயிட்டேன். அந்த எஸ்டேட் மேனேஜர் வந்தா பூட்டிட்டு போயிடுன்னீங்க. நான் எங்க போய் உக்காந்துக்கறது?''

''இனிமே நீ பூட்டிட்டு போவேணாம். ஒயரை அறுக்க வேணாம். துட்டு குடுத்தா போன் பேசலாம்னு சொல்லிடு. வேற எதுனா அவன் பேசினா என்கிட்ட பேசிக்கச் சொல்லு. ஏதோ போட் கிளப் ஆபீஸரால் பொழச்சோம். போ. உங் களை மேல கொண்டு வுடட்டுமா சார். மோட்டார் சைக்கிள் எங்கிட்ட இருக்கு. நானும் ஓட்டல்காரரைப் பாக்கணும்.''

பாலசுப்ரமணியம் அவன் வண்டியில் ஏறிக்கொள்ள வண்டி ஹோட்டல் வாசலுக்கு போயிற்று. சீனுவாசன் போனோடு மன்றாடிக் கொண்டிருந்தார். ''காலைலேர்ந்தே சரியா வேலை செய்யலீங்க என்று ஹோட்டல்காரர் சொல்லிக்

கொண்டிருந்தார்.''

அந்த பூத் ஆள் தன் பூத்தை உபயோகித்துக் கொள்ளுமாறு சீனுவாசனிடம் கேட்டுக் கொண்டான்.

''ஊருக்கு போகும்போது காசு செட்டில் பண்ணுங்க'' என்றான்.

சீனுவாசன் பாலுவைப் பார்த்து மெட்ராஸ் கிடைக்கவே மாட்டேங்கறது சார் - நீங்க எதாவது ஹெல்ப் பண்ணக்கூடாதா என்று கேட்டாள்.

''எங்க மேனேஜரைப் பாருங்க சார். ஒன்னவர் தான் ஷூட்டிங்னா அநேகமா அவரு. வுட்டுருவாரு.''

''அப்படியா? வாங்க போலாம்.''

''நான் வரலை. நீங்களா போய் பேசுங்க. நான் இருந்தா அவரு பேசறது கஷ்டம்.

அப்புறம் உங்க பரசுராம் தண்ணிபோட்டு போட் கிளப் பக்கம் படுத்துருக் காரு.''

''பரசுராமா.. இந்த ஸ்டண்ட் ஆளுங்களோட ரொம்ப கஷ்டம் சார். இப்படி நாலு மூலைக்கு குடிச்சுட்டு படுத்திருந்தா நான் ஷூட்டிங்கை கவனிப்பேனா.. இவங்களை கவனிப்பேனா? இங்கயே அரைமணி நேரம் இருப்பீங்களா? 'நான் ஆபீஸரைப் பார்த்துட்டு வந்துடறேன். ஒரு காபி குடுக்க ஏற்பாடு பண்ணுங்கப்பா. ஹோட்டலுக்கு கட்டளை கொடுத்துவிட்டு வண்டி எடுத்துக்கொண்டு கீழே போனார்.

''உங்களைப் பார்த்திருக்கேன். ஆனா பேசினது இல்லை. போட் கிளப்புக் குள்ள பூத் வைக்க ஏற்பாடு பண்ணணும். நீங்க எதுனா உதவி பண்ண முடியுமா. நான் டெலிபோன்ஸ்ல தான் இருக்கேன்.''

''டெலிபோன்ல இருக்கறவங்களே பூத் வைக்கலாமா?''

''சட்டப்படி வைக்கக்கூடாது. நான் வேற பேர்ல வாங்கி வச்சிருக்கேன். விமலா பேர்ல இந்த பூத் வாங்கியிருக்கேன்.''

''விமலா இங்க வேலை செய்யலையா?''

''வேலை தான் செய்யுது. மாசம் ஐநூறு ரூபா தரேன். ஆனா அது பேர்ல தான் பூத் வாங்கியிருக்கேன். அவங்கப்பா எனக்கு ரொம்ப சிநேகிதம். விமலாவை கட்டிக்க சொல்லி ரொம்ப நாளா சொல்லிட்டிருக்காரு!''

பாலு திகைத்தான். பேசாதிருந்தான்.

''நான் சின்ன வயசுல ரொம்ப கஷ்டப்பட்டவன் சார். கடவுள் புண்ணியத் துல டெலிபோன்ல லைன் மேனா வேலை செய்றேன். எங்கம்மா என்னை யூகலிப்டஸ் இலை பொறுக்கி என்னை வளர்த்தது. இன்னைக்கு நாலு பூத் வச்சி ருக்கேன் சார் ரோடுல இருக்கற கல்லெல்லாம் தினத்துக்கு ஒன்னா பொறுக்கிட்டு வந்து புறம்போக்கு இடத்துல வீடுகட்டிருக்கேன். ரொம்ப கஷ்டப்பட்டு எனக் குன்னு ஒரு இடம் கட்டிருக்கேன். இங்கிலீஷ் தெரியாது சார் விமலா மாதிரி ஒரு படிச்ச பொண்ணுகட்டிக்கிட்டா எனக்கு பலவிதத்துல சௌகர்யம். ஆனா அதுக்கு என்னைக் கண்டா புடிக்கலை. வயசு வித்தியாசம் அதிகம்னு சொல்லிடுச்சாம். எனக்கு முப்பது வயது சார். ஆனா என்னைப் பார்த்தா அப்படியா தெரியுது. போட் கிளப்ல மட்டும் ஒரு பூத் கிடைச்சிடுச்சு... ரொம்ப சௌகர்யமாயிடும் சார். ஊட்டில லேடீஸ் தனியால்லாம் போகக்கூடாது. டூரிஸ்ட் வர இடம். ஒரே மாதிரி இருப்பாங்கன்னு சொல்ல முடியாது. அத சொன்னா இந்த பொண்ணுங்களுக்கு புரியலை. காட்ல குப்பை பொறுக்கறபோது எங்கம்மா எப்படி பயந்து பயந்து

போவாங்கன்னு எனக்கு தெரியும். எங்கம்மா போறப்ப நானும் புஸ்தகம் எடுத்துட்டு போவேன். எங்கே எங்கம்மா இலை பொறுக்குதோ நான் அங்க உக்காந்து படிப்பேன். இப்ப முன்னைவிட ஊட்டி ரொம்ப டேஞ்ஜராயிடுச்சு. ஆனா பொண்ணுங்களுக்கு பயமே இல்லை. என்னா சார் நான் சொல்றது? அந்த பூத் ஆள் கேட்க பாலசுப்ரமணியம் பதில் சொல்லாது இருந்தான்.

''படிச்ச பொண்ணுங்க அப்படித்தான் இருக்கும்.'' பொதுவாய் சொன்னான்.

''என்னா படிச்சிருந்தாலும் ஆம்பளைத் துணை வேணுமில்ல. அசிங்கப்பட்ட பிறகு கத்தி என்னா புண்ணியம். நான் விமலாகிட்ட சொல்லிட்டு போறேன் சார். எதுனா ஹெல்ப் வேணும்னா சாரைக் கேளு. அவரு பாத்துக்குவாருன்னு சொல்றேன். உங்களை மாதிரி இருக்கறவங்க கிட்டக்க இருந்தா எனக்கு ஒரு நிம்மதி.''

தன்னைப் பார்த்தால் ஏன் எல்லோருக்கும் நல்லவனாக தோன்றுகிறது என்று பாலு அதிசயித்தான்.

''அப்ப நான் வூட்டுக்கு போறேன் என்று விடைபெற்று கிளம்பினான்.

''சீனுவாசன் வரேன்னாரே..''

''அதுல நான் செய்யறதுக்கு எதுவும் இல்லை. ஷூட்டிங்க்கு பர்மிஷன் குடுக்கற அதிகாரம் எங்க மேனேஜர் கிட்டதான் இருக்கு. அவரு வந்தா நான் போயிட்டதா சொல்லுங்க.''

மலையிலிருந்து வேறு பாதை பிடித்து வீட்டுக்கு கீழிறங்க அம்மாவும் வின்சென்ட்டும் வீட்டு வாசற்படியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. வின்சென்ட் ஏதோ சொல்ல அம்மா உட்கார்ந்து கதை கேட்டுக் கொண்டிருந்தாள்.

''அதைக் கண்டுபிடிச்சிட்டேம்ப்பா. அதப்பத்தி தான் அம்மாக்கிட்டு பேசிட்டிருந்தேன்.

''எதை?''

''அந்த விமலா மணிவண்ணனைத்தான் லவ் பண்ணுது. நான் மாட்டுத்தீவனம் கடைல உக்காந்து மணிவண்ணனோட பேசினேன். மணிவண்ணன் ரொம்ப சின்ஸியரா லவ் பண்றதா சொல்றான். விமலாவும் வீட்டுக்கு வந்து பேசிக்கன்னு சொல்லிடுச்சாம். மணிவண்ணன் அடுத்த வாரம் அவங்கப்பாவோட போறானாம்.''

''இதை விட முக்கிய விஷயம் என்ன தெரியுமா பாலு. உனக்கு பாத்துருக்கே அந்த வாத்தியார் பொண்ணு. அதுக்கு மணிவண்ணன் ஒன்னுவிட்ட தம்பி முறை. அநேகமா வாத்தியாரை இன்னிக்கு போய் பாக்க போறான். தன் லவ் பத்தி சொல்லப்போறான். அம்மா சொல்றாங்க அந்த வாத்தியார் இதுக்கெல்லாம் ஒத்துக்க மாட்டாருன்னு வாத்தியார் வராட்டி நாம போவமா பொண்ணு கேக்கறதுக்கு?''

பாலுவுக்கு வின்சென்ட் ஒரு பைத்தியக்காரனோ என்று தோன்றியது. அம்மாவைப் பார்த்தான்.

''ரெண்டு பேரும் கை கழுவிட்டு வாங்கடா சோறு போடறேன்'' அம்மா எழுந்து உள்ளே போனாள்.

அந்த பூத் ஆள் விமலாவை திருமணம் செய்ய எண்ணம் கொண்டிருப்பதை சாப்பிடும் போது வின்சென்டிடம் பாலு சொன்னான்.

அந்த பொண்ணு என்கிட்டியே மணிவண்ணனை புடிச்சுருக்குன்னு சொல்லிச்சுரா. பூத்ல வேலை செய்யறதை விட்டுறப் போறேன்னு வேற சொல்லிச்சு.

இரண்டு பேர் கிட்டயும் பேசினியா.

ஆமா நடந்துகிட்டே பின்னால போனேன். என்னா துரை லவ்வான்னு கேட்டுட்டு தாண்டினேன். இண்டு பேரும் நின்னுட்டாங்க. கொஞ்ச நேரம் பொறுத்து அந்த பையன் பின்னால ஓடி வந்தான். சரி அடிக்கத்தான் வரான் போலருக்குன்னு நினைச்சுக்கிட்டு சரட்டுன்னு திரும்பினேன் பையன் வந்து கைபிடிச்சிட்டான்.

உங்களைத் தெரியும் சார் இதை வெளிய சொல்லாதீங்கன்னான்.

நான் ஏண்டா வெளிய சொல்லப் போறேன். அது நல்ல பொண்ணு அதும் லைப்பை கெடுத்துடாதேன்னேன்.

அதெல்லாம் இல்லங்க. ரொம்ப நாளா கேட்டு இன்னிக்குத்தான் சரின்னுச்சு, நீங்க எதுனா பூந்து கெடுத்துரப் போறீங்களேன்னு ஓடியாந்தேன். அந்தப் பொண்ணும் கிட்ட வந்துச்சு.

கொஞ்ச நேரம் பேசாத நடந்தோம்.

அண்ணே நீ எமிலி ப்ரதர்தானே எமிலி யாரையோ லவ் பண்ணி ஓடிடுச்சுன்னா, நம்ம வீட்டு சமாச்சாரம்தான் ஊட்டி முழுக்க நாறிப் போச்சே.

நான் பதில் சொல்லாத வந்தேன்.

எமிலி நல்லா இருக்காங்களா அண்ணேன்னு கேட்டுது.

இல்லம்மா நல்லா இல்லை. கஷ்டப்படுது. அதுனாலதான் லவ்வு லவ்வுன்னு யார் அலைஞ்சாலும் எனக்கு வேதனையாயிடுதுன்னேன்.

மணிவண்ணன் நல்லவரு அண்ணே. நான் பல தடவ மறுத்தும் தப்பா நடந்துக்கவேயில்லை. இன்னிக்குத்தான் மறுபடி கேட்டாரு. நான் சரின்னேன்னு சொல்லுச்சு.

மணிவண்ணனுக்கு நல்ல வியாபாரம். மாட்டுத்தீவனம் தவிர சந்தனக் கட்டை ஏலத்துல எடுத்து தூள் பண்ணி விக்கறானாம்.

எதுனா பிரச்னையிருந்தா எங்கிட்ட சொல்லுங்க இரண்டு பேரும்னு சொல்லிட்டு வந்தேன். ஜம்புக்கு அப்பறம் என்னா பண்ணாங்க ஷூட்டிங்ல.

வெடிக்க வச்சாங்க. எங்கிட்ட வந்து போட் கிளப் பர்மிஷன் கேட்டாங்க. ஜீப்ல அனுப்பினாங்க அந்த ஜம்ப் பண்ண ஆளு பேரு பரசுராம். எங்கூட போட் பார்க்கணும்னு ஜீப்ல வந்து ஏரி ட்ரைல மல்லாக்க படுத்து கிட்டு இருக்கான்.

ஏன்.

தண்ணீ.

ஐயோ எதுனா உள்ள விழுந்து செத்துறப் போறான்பா.

எழுந்துக் கிடவே முடியாது. சீனுவாசன்னு ப்ரொடக்ஷன் மேனேஜர் கிட்ட சொல்லிட்டேன். அவரு பார்த்துக்கிறேன்னுட்டாரு.

''என்னா ஜம்ப் இல்லை?''

பல படத்துல ஜம்ப் பண்ணியிருக்கான் அந்த ஆளு. ஜம்புக்கு ஆறாயிரமாம்.

எப்படி பயமில்லாத உருண்டானில்லே.

பயம்தானாம். ஓட்டறப்ப கண்ணை மூடிக்குவானாம்.

நாளைக்கு போட் கிளப்ல ஷூட்டிங்கா?

தெரியலை.

சரி நான் வீட்டுக்கு போட்டுமா.

இருடா. இன்னிக்கு எங்க வீட்ல தங்கிடு. இருட்டிப் போச்சே. அப்படி ஏரிக்கரை வரைக்கும் நடந்து பரசுராம் முழிச்சுட்டானான்னு பார்த்துட்டு வரலாம் வா.

வீட்ல அம்மா தேடுவாங்க.

போன் பண்ணி சொல்லிடு. அந்த பொண்ணு விமலா பூத் போய் போன் பண்ணிடலாம்.

பூத் ஆள் இருப்பானா.

இருப்பான்.

பூத்தில் கூட்டமிருந்தது. சினிமாக்காரர்கள் ஆறேழு பேர், கூட்டமாக போன் அருகே நின்று மாற்றி மாற்றி போன் செய்து கொண்டிருந்தார்கள்.

விமலா பெட்ரோமாட்ஸ் விளக்கொளியில் டெலிபோன் சுழற்றிக் கொண்டிருந்தாள்.

பாலு சார். உங்க ஆபீஸர் கிட்ட பேசிட்டேன். மெட்ராஸுக்கு இன்பார்ம் பண்ணிட்டு காலைல ஷூட்டிங்கு வரச் சொல்லிட்டாரு.

என்ன வேணா செய்யுங்க. என்னைய இழுத்து விட்டறாதீங்க.

எங்க ஷூட்டிங் எடுக்கணும். வின்செண்ட் இடையில் புகுந்து கேட்டான்.

ஏரில படகு ஓட்டற மாதிரி. சீனுவாசன் பதில் சொன்னார்.

யாரு ஓட்டப் போறது.

பரசுராம்தான். சும்மா ஒரு தடவை இந்த கோடிலேர்ந்து அந்த கோடி ஓட்டறத வளைஞ்சு வளைஞ்சு எலிகேப் மாதிரி ஓட்டணும்.

இதுக்கு ஏன் பர்மிஷன்.

பர்மிஷன் வாங்காத எப்படி எடுக்கறது.

நான் ஐடியா சொன்னா எனக்கு ஐநூறு தரீங்களா.

வம்பா எதுவும் செய்துடக் கூடாது சார் அப்பறம் கேமிராவை ஸீஸ் பண்ணிட்டா கஷ்டம்.

வம்பே வராது.

சொல்லுங்க.

ஐநூறு தரிங்களா அதட்டலாய் வின்செண்ட் கேட்டான்.

ஓர்க் அவுட் ஆச்சுன்னா தரலாம்.

வாங்க என் கூட.

சீனுவாசனோடு பாலுவும் வின்செண்ட்டும் ஏரி நோக்கி போனார்கள். பரசுராம் இன்னும் புல் மீது மல்லாக்கப் படுத்திருந்தான்.

இவனை கூட்டிக்கிட்டு போலையா.

போவணும். அவனவன் ஆஞ்சு ஓஞ்சு ஷூட்டிங்லேர்ந்து இப்பத்தான் வந்திருக்கோம். வுடுங்க நம்ம வேலையப் பார்ப்போம்.

பரசுராம் தாண்டி கரையோடு நடந்தார்கள். ஏரி வளைவாய் கிட்டக்க பிறை நிலவு வடிவாய் இருந்தது.

இதுக்கு நேர் மேல ரோடு உசரம். உங்க ரோட்ல கேமிரா வச்சா இரண்டு பக்க ஏரி முனையும் தெரியும். அதே மாதிரி அந்த முனைக்கு போனா அங்கயும் உசரத்துல ரோடு. ரோட்ல காமிரா வச்சுர வேண்டியது. ரோட்ல காமிரா வைக்க யார் பர்மிஷனும் வேணாம். பரசுராமா யார் அது அவரை அறுவத்தஞ்சு ரூபா

கொடுத்து போட்ல ஏறிக்க சொல்லுங்க ஓட்ட சொல்லுங்க. ஓட்டறபோது வளைஞ்சு வளைஞ்சு ஓட்டினா ஷூட் பண்ணிடலாம். இதுக்கு போய் ஏன் பர்மிஷன் மெட்ராஸ் கால் எல்லாம்.

கரெக்ட் சார் நீங்க சொல்றது.

ஓட்டற ஷாட் இறங்கற ஷாட் ரண்டுதான் சொன்னாங்க. இருங்க காமிரா மேனை டைரக்டரை கூட்டியாரேன். சீனிவாசன் திரும்பினார்.

பரசுராம் எடுத்துகிட்டு போலையா.

கிடக்கட்டும். எனக்கு நாளைக்கு ஷூட்டிங் முக்கியம்.

உயிரக் கொடுத்து ஜீப் ஜம்ப் செய்தான் எப்படி விட்டுட்டு போறாங்க பாரு வின்சென்ட்.

ஜீப் ஜம்ப்போட சினிமா முடிஞ்சு போச்சா. அடுத்த வேலைக்கு போகணுமில்ல. இப்படி ஆளுக்கு ஆள் மூலைல படுத்து கிடந்தா என்ன செய்ய முடியும். ஒரு டூர் ல குரூப்பா வந்தா மத்தவங்களுக்கு உதவியா இருக்கணுமே தவிர இப்படி உபத்திரவம் பண்ணக்கூடாது. நாமே எழுப்பிப் பார்ப்பமா பாரு.

ஏரியிலிருந்து உள்ளங்கை நீர் கொண்டு வந்து பளிச்சென்று பாலு பரசுராம் முகத்தில் அடித்தான்.

ஆத்தா என்னைய கொன்னுடாதே, ஆத்தா என்னை ஒன்னும் பண்ணாத.

பரசுராம் உளறினான். கண் மூடி கை உயர்த்தி கத்தினான். நண்பர்கள் பயந்து விலகினார்கள். என்ன இது என்பது போல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

பரசுராம் கண்முன்னே இருட்டுக்கு நடுவே வெள்ளை உடையில் ஐம்பது பெண்கள் உள்ளிருந்து எழுந்தார்கள். அதில் தலைமையாய் தலைவி போன்ற உடையில் அவன் மனைவி இருந்தாள்.

சிரித்துக் கொண்டே பரசுராமை நெருங்கினார்கள். அந்த சிரிப்பில் விஷமமும் வஞ்சனையும் இருந்தன.

பாலு பரசுராமனுக்கு அருகே நெருங்கினான்.

ஐயோ கிட்ட வராதே கிட்ட வராதே நான் செத்துருவேன். கிட்ட வராதே பரசுராமன் பயப்படும் குரலில் கத்தினான்.

பாலுவுக்கு பயம் வந்தது. இருட்டின் பின்னால் தபதபவென்று சப்தம் கேட்டது.

எழுந்து வின்சென்டடுக்கு அருகே நின்று கொண்டான்.

ஓசை.

என்னங்க யாரோ அழுவுற சத்தம் கேட்டது.

இவருதான்.

பரசுராமா யோவ் எந்திரியா.

ஐயோ கிட்ட வராதே.

அடத் தூ எழுந்துரு முதல்ல நீ. குடிச்சுட்டு தூங்கவா போட் கிளப்பு.

பரசுராமை சூசை உலுக்கினான்.

சூசையப்பா சூசையப்பா.

என்னாப்பா என்ன சொல்லு.

நான் தேவதை பார்த்தேன்.

எங்கனே.

தண்ணில. அம்பது பேர் பார்த்தேன்.

ராத்திரி இங்க படுத்தா அப்படித்தான் கனவு வரும்.

என்னங்க சொல்றாரு பாலுவின் குரலில் பயம் இருந்தது.

தேவதை தெரிஞ்சுதாம்.

என்னாவோ உளறி கொட்டறான். வின்செண்ட் குரலில் கேலி இருந்தது.

உளறல் இல்லீங்க. நானும் பாத்துருக்கேன்.

தண்ணி போட்ட பிறவா.

யார் பா நீ.

என் சினேகிதன்.

அவரை சும்மா இருக்க சொல்லுங்க பாலு சார்.

நீ தேவதை பார்த்திருக்கியா.

பௌர்ணமில வரும்.

இன்னிக்கு பௌர்ணமி இல்லையே.

எப்ப வேணாலும் வரும்.

எங்க.

ஏரில எங்க வேணா வரும்.

சும்மா ரீல் வுடுங்கய்யா வின்செண்ட் மறுபடி கேலி செய்தான்.

தில்லு இருந்தா குளிர் தாங்கற சக்தி இருந்தா ராத்திரி முழுக்க ஏரி கரைல உட்கார். தெரியும்.

தெரியலைன்னா.

நீ பாவம் பண்ண பன்னாடைன்னு அர்த்தம்.

செருப்பு பிஞ்சுரும். வின்செண்ட் சீறினான்.

டேய்

என்னடா நாயே குடிகார நாயே.

வெளிய போடா. யார் நீ. ஏன் இங்க இருக்க. வெளிய போ.

சூசை.

உனக்காக பார்க்கறேன் பாலு. அடிச்சு ஏரில அமுத்திடுவேன்.

வேற எவனா குடிகாரனை பாரு அதுக்கு.

விமலா நாற்பது போன்கள் செய்து விட்டாள் கைகள் வலித்தன. இடுப்பு இழுத்தது. அடிவயிறு கனத்தது.

என்ன பூத் ஆள் கேட்டான்.

நீங்க கொஞ்சம் பார்த்துக்கங்க நான் ஏரி பக்கம் நடந்துட்டு வரேன்.

தனியா போறியே.

தனியாதான் போவணும்.

இரு பூட்டிவிட்டு வந்துடறேன். இரண்டு பேரும் போவலாம்.

கருமம். நான் மட்டும்தான் போவணும்.

பூத் ஆள் விழித்தான். புரிந்து கொண்டான்.

போட் கிளப்புல பாத்ரூம் இருக்கும்.

பூட்டிருவாங்க.

பூச்சி பொட்டு இருக்கப்போது.

இருக்காது.

தனியா போறியே.

நான் வீட்டுக்கு போயிட்டுமா.

இன்னும் ஒன் அவர் இரு விமலா. இரண்டு பேரும் சேர்ந்து வீட்டுக்கு போயிடலாம்.

நான் ஏரி பக்கம் போயிட்டு வரேன்.

அவள் எதிர்பக்கம் போனாள். தோட்டக்கல் இழுத்து வேலிக்குள் நுழைந்தாள். மரங்களூடே நடந்தாள். குளிர் மெல்ல உடம்பை வருடிற்று. குரலை கோதியது. பூத்தில் உட்கார்ந்து புழுங்கிய வெப்பம் உடலைவிட்டு போயிற்று. சருகுகள் மெத்து மெத்தென்று செருப்புக்கு கீழே உருத்தின.

காற்று தரையில் மோதி புடவைத் தலைப்பை விசிறியது.

மணிவண்ணனோடு நடந்து வரும்போது கூட புடவைத் தலைப்பு இப்படித்தான் பறந்து இழுத்தது. மணி புடவைத் தலைப்பை பிடித்து தோள் போர்த்தினான். அப்படி அவன் செய்தது சந்தோஷமாக இருந்தது.

எதிரே ஏரி ஊட்டி விளக்கு வெளிச்சத்தில் பளபளத்து படர்ந்தது. விமலா ஏரியின் சரிவில் மெல்ல கால் வைத்து இறங்கினாள். வழுக்கியது. நின்றாள். திரும்பிப் பார்த்தாள். அங்கிருந்து பூத் தெரிந்தது. அவன் திரும்ப திரும்ப வெளியே பார்த்துக் கொண்டிருந்தான்.

சரிவுதான் மறைவு என்று தோன்றியது. மறைந்து கொள்ள சரிவில் மறு கால் வைத்தாள். பனி ஈரம் மறுபடி வழுக்கியது. காலை கோணலாய் வைத்தால் வழுக்காது செருப்பு கழற்றி விட்டால் சுத்தமாய் வழுக்காது என்று நினைத்தாள். செருப்பு விடுவித்துக் கொண்டு, வெறும் கால் வைத்தாள். கோணலாய் பாதங்கள் பதித்து இறங்கினாள். ஈரம் சில் செல்ல தொடைகளைத் தாக்கியது அவசரம் ஏற்பட்டது. நாலைந்து தப்படி எடுத்து வைத்து ஏரி நுனிக்கு வந்தாள். உட்கார்ந்தாள்.

''இப்ப ஜீப் உருண்டது, வெடிச்சது காட்டுக்குள்ள ஓடினது ஈவினிங் எஃபெக்ட். அதனால உச்சி வெயில் எடுக்க முடியாது. கொஞ்சம் அரையிருட்டா இருந்தா நல்லது. காலைலயும் ஈவினிங் எஃபெக்ட் கிடைக்கும். போட் போற ஷாட் காலைல ஏழு மணிக்கு எடுத்துரலாம்ணே.'' டைரக்டர் இளைஞன் சீனுவாசனோடு நடந்தான்.

''எடுத்துரலாம். நான் சொல்ற ஐடியா உங்களுக்கு சரியா வருதா பாருங்க.'' சீனுவாசன் வின்சென்ட்டின் ஐடியாவை தன் விஷயமாக காட்ட முயற்சித்துக் கொண்டிருந்தார். வின்செண்ட் எதிர்பட்டால் எப்படி அவனை விலக்குவது என்றும் யோசித்துக் கொண்டிருந்தார்.

''இதுல என்ன தொந்தரவுன்னா போட் கிளப்புக்கு சம்பந்தமில்லாத ஆளுங்களும் குறுக்க பூந்து பேசறாங்க. நான் அங்கங்கே சரி பண்ணி வச்சிருக்கேன். தயவு செய்து நீங்க யார் கிட்டயும் பேசாதீங்க. இடம் சரியான்னு மட்டும் சொல்லிட்டு போங்க. எங்கே கேமராமேன் வரேன்னாரு... காணமே.''

கேமராமேன் தொலைவில் சறுக் சறுக் என்று நடந்து வருவது கேட்டது. அவன் வரட்டும் என்று அவர்கள் சற்று உயரத்தில் காத்திருந்தார்கள். காலுக்கு கீழ் டெலிபோன் பூத் தெரிந்தது. டெலிபோன் பூத் ஒட்டி தெரு தெரிந்தது. தெருவைத்

தாண்டி ஒரு தோட்டம் தெரிந்தது. தோட்டம் தாண்டி ஏரி பளபளத்துக் கிடந்தது.

''யாருங்க அது?'' டைரக்டர் இளைஞன் ஒரு திசையை நோக்கி கை காட்டி சீனுவாசனிடம் கேட்டான்.

''யாரு.. எங்க?'' சீனுவாசன் தேடினார்.

''யாரோஒரு லேடி போறாங்க...''

''எங்க?''

''தோட்டத்துக்கு நடுவுல போறாங்களே.. அதபாரு அத பாரு.. டைரக்டர் இளைஞன் பரபரத்தான்.

''எனக்கும் ஒன்னும் தெரியலையே'' சீனுவாசன் இருட்டில் கண்களை இடுக்கி துழாவினார்.

''நானும் அதேதான் பாத்துட்டு வரேன்'' கேமரா இளைஞன் அவர்களோடு சேர்ந்து கொண்டான்.

''இருட்டுல தனியா வேற நடந்து போறாங்க.... எதாவது தப்பான காரியம் நடக்குதா?''

''இந்த இருட்டிலியா? சீனுவாசன் வியந்தார்.

''எனக்கும் அப்படித்தான் டவுட்டு. ஆனா சிங்கிள் லேடியா போறாங்களே. அதான் பாத்தேன்.''

''ஏதோ ஒரு கருமம். வாங்க நம்ம வேலைய கவனிப்பம்.''

''போட் ஷாட் எடுத்துட்டம்னா குன்னூர் போயிடலாம். குன்னூர்ல அரை நாள் வேலை. அப்புறம் கீழ போயிடலாம். அதனால காலைலயே பேர் பாதிய கீழ அனுப்பிருங்க. எனக்குபத்து ஆள் இருந்தா போறும்'' டைரக்டர் சொல்ல சீனுவாசன் தலையாட்டினார்.

மலையிலிருந்து இறங்கி தெரு தாண்டினார்கள். ''இன்னா பாத்த... விவரமா சொல்லு.'' சூசை பரசுராமை அரித்துக் கொண்டிருந்தான்.

''அம்பது பொம்பளைங்க வெள்ளை டிரஸ் போட்டுட்டு தண்ணிலேர்ந்து எழுந்து வராங்க. வா... வான்னு என்னைக் கூப்புடறாங்க.'' பரசுராம் அழுது கொண்டே சொன்னான்.

''இன்னொரு குவார்ட்டர் ஊத்திக்கங்க. உள்ள கூட்டிட்டு போயிடுவாங்க. இன்னொரு குவார்ட்டர் ஊத்திக்கங்க. உள்ள அமுத்திடுவாங்க.''

''சார் அவர சும்மா இருக்கச் சொல்லுங்க. ஏரில நடமாட்டம் உண்டு''

''என்ன நடமாட்டம் சூசை?''

''பேர் சொல்லக் கூடாது''

''சொன்னா என்ன ஆவும்''

''எழுந்து வந்துரும்'' சூசை உறுதியாய் சொன்னான்.

''எழுந்து வந்து என்னா செய்யும்?''

''என்னா வேணா செய்யும்''

''ஒன்னும் செய்யாதுங்க. எங்காத்தா ரொம்ப நல்லவ. என்னை இத்தினிநாள் காப்பாத்தினது எங்காத்தா தான். நான் நாளைக்கு ஒட்ட போறேன்னு தெரிஞ்சு என்னை காப்பாத்தறதுக்கு இன்னிக்கே ஏரியை சுத்தி சுத்தி வரா.

''ஆத்தான்னா யாரு... மாரியாத்தாளா? உங்க தாயாரா?'' பாலுவுக்கு அது என்ன என்று தெரிந்து கொள்ள ஆவல் மிகுந்து விட்டது.

ஆறு வருஷம் போட் கிளப்பில் வேலை செய்து ஆத்தாளை பார்த்ததில் லையே என்று ஏக்கம் வந்தது. இதற்கு முன் கூட யாரோ சொல்லியிருக்கிறார்கள். போட்கிளப்பில் நடமாட்டம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். தனக்கு தெரிந்து நாலுபேர் மூழ்கி செத்துப் போயிருப்பதாய் சொல்லியிருக்கிறான். நின்று போட்டோ எடுத்த பெண்மணி, ஏழுமாத கை குழந்தை, ஒரு பாலிடெக்னிக் பையன், குடித்து விட்டு டான்ஸ், ஆடின முப்பத்தைந்து வயது மலையாளி என்று வரிசைப் படுத்தியிருக்கிறான்.

''சொல்லுங்க... ஆத்தான்னா உங்க தாயாரா மாரியாத்தாளா?''

''எம் பொண்டாட்டிங்க மூத்த சம்சாரம்.'' பரசுராம் தழுதழுத்த குரலில் சொன்னார்.

''சபாஷ். இந்த ஏரிலதான் உம் பொண்டாட்டி விழுந்து செத்துபோச்சா?'' வின்செனட் கேலியை விடவேயில்லை.

''இல்லீங்க எங்க வூட்டு கிணத்துல வுழுந்து செத்துப் போச்சு. அது நகையெல் லாம் திருடி நான் மோட்டார் சைக்கிள் வாங்கிட்டேன். அந்த துக்கத்துல கிணத் துல வுழுந்துருச்சு.''

வின்செனட் முகம் மாறினான். இதுதான் எமிலி அக்காவுக்கும் நடந்தது.,, இருபது பவுன் நகையோடு எவனோடோ ஓடிப் போனவள் இன்று பொட்டுத் தங்கம் கூட இல்லாமல் பழைய புடவையும், கிழிந்த ரவிக்கையுமாய் எவன் கூடவோ குடும்பம் நடத்துகிறாள். இதுவும் கிணற்றில் விழுந்தது போல்தான். அவள் கை மாறியதும் தற்கொலை மாதிரிதான். எமிலி அக்கா செத்துப் போன மாதிரியே வீட்டில் எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உயிரோடு எங்கோ வாழ்பவளை இவள் தனக்கு பெண்ணே இல்லை என்று நினைத்துக் கொண்டே இருக்கிறார்கள். வின்செனட் பரசுராமை வெறுப்புடன் உற்றுப் பார்த் தான்.

''நாளைக்கு நீ குப்புற கவுறணும். நான் கண்ணாற பாக்கணும'' என்று மனதில் நினைத்துக் கொண்டான். பெண்களை ஏமாற்றும் ஆண்களை வின் சென்ட்டுக்கு பிடிப்பதேயில்லை. அவன் எவ்வளவு பெரிய தீரனாக இருந்தாலும் அவன் மீது மதிப்பில்லை. எங்கோ சிலர் நடந்து வரும் சப்தம் கேட்டது.

''இத்தினி இருட்ல கூட பொண்ணு போறது தெரியுதா சார் உங்களுக்கு...'' பேச்சுக்குரல் கேட்டது.

வேறு யாருக்கோ கூட தெரிந்திருக்கிறதா? என்று பாலு வியந்தான்.

சீனுவாசன் முன்னால் வர டைரக்டரும், கேமரா மேனும் பின்னால் வந்தார் கள். பரசுராம் எழுந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார்கள்.

''என்ன பரசுராம் நல்லாருக்கா நீ பண்றது? உன் வேலைக்கு மதிப்பு வச்சு மரியாதையா நடத்தினா அதை அன்னிக்கு சாயந்தரமே கெடுத்துக்கணுமா?'' டைரக்டர் இளைஞன் அதட்டினான்.

''அவர் அம்பது பொண்ணு பாத்தாராம் சார்'' வின்செனட் சீனுவாசனை நோக்கி சொன்னான்.

''எங்க?''

''ஏரிக்கரைல''

''நாங்க ஒரு பொண்ணு பாத்தம்''

''எங்க?''

''ஏரிக்கரைல. இப்ப பாத்தமே''

''நாங்க பாக்கலையே'' பாலு நிமிர்ந்து ஏரியைத் துழாவினான்.

''எந்தப் பக்கம் பாத்தீங்க?'' சூசை பதறினான்.

''இதோ நேரா... அந்தப் பக்கம்'' வந்த மூவரும் கை காட்டினார்கள்.

தோட்டத்துல பூந்து ஏரிக்கரையா இறங்குது. வாங்க பாத்துருவம்'' சூசை நகர்ந்தான்.

''ஐயோ எங்க ஆத்தா கிட்ட போவாத. அவ பொல்லாதவ.''

''சித்த முன்னாடி நீ தானய்யா அவ நல்லவ... என்னைக் காப்பாத்த சுத்தி சுத்தி வரான்னு சொன்ன?''

''அவ என்னைக் காப்பாத்துவா. உங்களைக் காப்பாத்துவாளான்னு தெரியாது.

''அடி சக்கை. உனக்கு பேய் பொண்டாட்டின்னா... எனக்கு உடம் பொறந்தா மாதிரி. போய் பாத்து பேசி மஞ்சள் குங்குமம் குடுத்துட்டு வரலாம் வா'' வின்சென்ட் சாக்ஸுக்குள் பேண்ட்டை நுழைத்தபடி பேசினான்.

புற்கள் முளைத்த மலைச்சரிவில் இப்படி போவதே நல்லது. அட்டை காலுக்குள் ஊருது. தொடை வரை ஏறாது. தப்பா இடத்தில் கடித்து வைக்காது. பாலுவும, அவ்விதமே மாறிக் கொள்ள இது தெரியாதவர்கள் சாதாரணமாய் பெண் இருந்ததாக சொல்லப்படும் திசை நோக்கி நடந்தார்கள். சூசைக்கு ஷூ இல்லை. செருப்புதான். அவன் உதறி, உதறி புல் சரிவின் மீது முதலில் நடந்தான். விமலா எழுந்தாள். சோம்பல் முறித்தாள். காதல் நினைவோடு இருக்கும் அந்தப் பெண்ணின் உடம்பு சூடு இறங்கி குளிர் பட்டதும் இன்னும் ஆனந்தமாயிற்று. இடுப்பு சுற்றி ஒரு சுறுசுறுப்பு ஓடிற்று. திரும்பி ஏரி மேட்டில் கால் வைத்தாள். யாரோ நடந்து வரும் சத்தம் கேட்டது. சரசரவென்று மேலேறினாள். தோட்டத்துள் புகுந்தாள். செருப்பு மறந்து விட்டது ஞாபகம் வந்தது. பதட்டத்தில் எங்கே வைத்தோம் என்பது மறந்து விட்டது.

கால்களால் செருப்பு எங்கே இருக்கிறது என்று துழாவினாள்.

தொலைவில் ஒரு பெண் இடுப்பு அசைத்து நடனமாடுவது அவர்களுக்கு தெரிந்தது.

செருப்பு கிடைத்ததும் கால்களை செருப்புக்குள் நுழைத்துக் கொண்டாள்.

அவர்கள் வருகை தெரிந்ததும் அந்தப் பெண் நடனமாடுவதைச் சட்டென்று நிறுத்தியது.

செருப்பை சரியாய் மாட்டிக் கொள்ள விமலா கட்டை விரலை வளைத்து நுழைத்தாள்.

கால் சறுக்கியது.

தொலைவில் இருப்பவர்களுக்கு அந்தப் பெண் கால்கள் அசைக்காமல் நகருவது தெரிந்தது. பாதத்தைக் கோணலாய் வைத்து விமலா அவர்கள் வரும் திசை நோக்கினாள்.

நழுவி நடப்பதை நிறுத்தி அந்தப் பெண் அவர்களைப் பார்த்ததும் அவர்கள் நின்றார்கள்.

''ஏய்...'' என்று சூசை குரல் கொடுத்தான்.

அந்தக் குரலுக்கு பயந்து விமலா தப்பாக கால் வைத்தாள்.

சறுக்கினாள். அந்த உருவம் சறுக்கிப் போவதை அவர்கள் வியப்போடு பார்த்தார்கள்.

என்னைப் பார்க்க இத்தனை பேரை ஏன் கூட்டிக் கொண்டு வருகிறாய் என்று அவள் கோபித்துக் கொண்டதாய் உணர்ந்தான்.

பாலுவுக்கு முதுகு சில்லிட்டது. ஒன்றுக்கு வேகம் அதிகரித்தது.

ஆத்தா... ஆத்தா? என்னை விட்டு போகாத ஆத்தா... இவர்களைத் தாண்டி அவளிடம் ஓட வேண்டுமென்று முன் நோக்கி ஓடினான். குடிபோதையில் கால்கள் தள்ளாடின. அவன் வெற்றுப் பாதங்களில் அட்டைகள் ஏறின. நெளிந்து நெளிந்து பேண்ட் வழியே கால்களில் ஏறின.

விமலா ஆண்கள் வருவது கண்டு பயந்தாள். திரும்பினாள்., வழுக்கியது. சரிவு பின் பக்கம் தள்ளியது. தடாரென்று தண்ணீரில் விழுந்தாள். தண்ணீர் பெரிதாய் தெறித்தது.

பரசுராம் பயந்து நின்றான். மற்றவர்களும் நின்றார்கள். பாலுவால் நடக்கவே முடியவில்லை. நடந்தால் பேண்ட் சூடான ஈரமாகும் என்று தெரிந்தது. பல்லைக் கடித்து பொறுத்துக் கொண்டான்.

வின்சென்ட் தாண்டி ஓடினான். பரசுராமைக் கடந்தான். கழுத்து வரை விழுந்த விமலா எழுந்து நின்றாள். கை சேறை எடுத்து ஆண்கள் மீது வீசினாள்.

சொத்தென்று முதல் சேறு வின்சென்ட் முகத்தில் பட்டது. வின்சென்ட் கண்ணை துடைத்துக் கொண்டான். தடுமாறினான். சறுக்கி தண்ணீரில் விழுந்தான்.

பரசுராமுக்கு அருகே போகலாமா வேண்டாமா என்று குழப்பமாக இருந்தது. விமலாவின் செருப்புகள் சேற்றில் சிக்கிக் கொண்டன. விமலா செருப்பை விட்டு விட்டு எழுந்து நின்றாள். முழுபலத்துடன் சரிவில் பாதம் பதித்து மேடேறினாள். ஈரம் சொட்டச் சொட்ட தோட்டத்துக்குள் புகுந்தாள்.

பரசுராம் சரிவில் இறங்கி வின்சென்ட் மயிரைப் பிடித்து கரையில் இழுத்து போட்டான். கேமராமேன் பையிலிருந்து பென் டார்ச் எடுத்து வின்சென்ட் முகம் பார்த்தான். நீரில் விழுந்ததால் சேறு சுத்தமாக்கப்பட்டிருந்தது. குளிரில் நடுங்கிய வின்சென்ட்டை கேமராமேனும், டைரக்டரும் பிடித்துக் கொண்டார்கள்.

''வேணாம் சார் போயிடலாம்'' சீனுவாசன் தொலைவிலிருந்து கத்தினார்.

வின்சென்ட்டை அணைத்துக் கொண்டு அவர்கள் திரும்பினார்கள்.

இந்த ஈரத்தோடு பூத்துக்கு போவதை விட நேரே வீட்டுக்கு போய் விடுவது நல்லது என்று விமலா தீர்மானித்தாள். தோட்டக் கலை சங்கத்தின் வேறு பாதை தேர்ந்தெடுத்து மரங்களை ஒட்டி நடந்து போனாள்.

இரவு பத்து மணிக்கு பூத்தில் வேலை செய்யும் பெண் அங்கே ஒதுங்க வந்திருப்பாள் என்பதை அந்தக் கூட்டத்தில் உள்ள யாரும் நினைத்துப் பார்க்கவேயில்லை. அவர்கள் பரசுராம் படுத்துக் கிடந்த இடத்துக்கு வந்தார்கள்.

''என்னாங்க இது...'' பாலு வியப்புடன் கேட்டான்.

''நடமாட்டம் இருக்குன்னு சொன்னா யாரும் நம்பலை. இப்ப நம்பித்தான் ஆவணும்.'' சூசை பதில் சொன்னான். தான் சொன்ன பொய்யையே உண்மை என்று இப்போது சூசையும் நம்பினான்.

அவர்கள் வெறுமே ஏரியைப் பார்த்து நின்றிருந்தார்கள். பூத்தின் சொந்தக்காரன் பூத்தைப் பூட்டிக் கொண்டு வீடு நோக்கி போனான். ஏரிக்கரையில் ஓடியவர்கள் தெருவுக்கு வந்து பிரிந்தார்கள்.

''இப்ப எதுவும் பேச வேணாம். காலைல பாத்துக்கலாம்'' என்றார்கள். பேசினால் பேய் மறுபடி வரும் என்று நம்பினார்கள்.

ஏரி, இரண்டு பேர் சறுக்கி விழுந்து எழுந்த சலனத்தை தன்னுள் விழுங்கிக் கொண்டு அமைதியாக இருந்தது.

எல்லோரும் போன பிறகு சூசை மறுபடியும் அந்த இடத்திற்கு போனான். மூத்திர நாற்றம் அடித்தது. நீரில் ஊறிய தோல் செருப்பு ப்ளாக் என்று மேலே வாறு மிதந்தது.

எவளோ கால் கழுவ வந்துட்டு போயிருக்கா. கூட்டமா போனதுல பயந்துட் டோம். செருப்பு உசத்தியா இருக்கு.

இப்படி உசத்தி செருப்பு போடறவ இங்கன ஏன் உட்காரனும். இந்தப் பக்கம் யாரு உசத்தி செருப்பு போடறவங்க. யோசித்தான்.

திரும்பி ஏரி பார்த்து சிரித்தான்.

அடி செருப்பால ஏரிக்குள் செருப்பு வீசினான்.

இன்னிக்கு நேத்திக்கா பார்க்கறேன் உன்னை. பிறந்த அன்னிலேர்ந்து எனக்கு பிழைப்பு இங்கதானே. என்னியே ஏமாத்திட்டியே ஏரியிடம் பேசினான். மெல்ல போட்டுள்ள கட்டிடத்துக்குவந்தான். விடிந்ததும் சினிமா கம்பனியிடம் ஐநூறு ரூபாயாவது வாங்கிவிட வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

ஏரி தாய் மாதிரி யாரையும் விழுங்காது. எவரையும் கொல்லும் எண்ணம் ஏரிக்கு இல்லை. சின்ன பயம் கூட இயற்கைமீது இல்லாதவனை இயற்கை உலுக்கும். மற்றபடி பேயோ பிசாசோ இங்கு இல்லை.

யோசித்துக் கொண்டே கொஞ்சநேரம் எதுவும் யோசிக்காமல் கொஞ்ச நேரம் ஏரியைப் பார்த்துக் கொண்டிருந்தான். சூசை பார்க்கும் போதே கிழக்குப் பக்கம் வெளிச்சம் தோன்றியது. விடிந்தது.

யூனிட் முழுக்க செய்தி பரவி விட்டது.

காலு இருக்கா சார்.

உருவா புகையா

என்னா கலர்

கோரமா இருந்துச்சாமே.

இல்லப்பா வயசு பொண்ணு மாதிரி ஷேப்பா இருந்துதாம்.

இப்ப போய் பாக்கலாமா. இரண்டு பேர் கிளம்பினார்கள்.

கொன்னுருவேன். குடிச்சுட்டு விழுந்து கிடக்கறவனை கொண்ணாரவே தாலி அந்து போச்சு. பேய் அடிச்சு எங்க கிடக்கேன்னு நானு தேடணுமா. போய் படுங்கடா சீனு சத்தம் போட்டார்.

ஆள் ஆளுக்கு பேய் பார்த்த கதை பேசத் துவங்கினார்கள். விடிய தூங்கினார் கள்.

சீனுவாசன் அதட்ட யூனிட் கண்சிவக்க எழுந்து கடன்கள் முடித்து மலைக்கு கீழே காமிராவோடு இறங்கியது.

தெருவோரம் காமிரா வைத்து ஏரியின் கோணம் பார்த்தது.

எட்டு மணிக்குத்தான் போட் தருவோம்.

வெய்யில் வந்துருமே.

வரத்தான் செய்யும். சினிமா யூனிட்டு நீங்கன்னு சொன்னா வெய்யிலு நின்னு டுமா.

அதில்ல சார் ஈவினிங் எபஃக்ட்.

எனக்குத் தெரியாது. எட்டு மணிக்குதான் போட் தருவோம்.

சார் அட்ஜஸ்ட் பண்ணிக்கங்க சார்.

ஏழுமணிக்கு ஓட்டறாப்பல பண்ணுங்க சார்.

என்ன அட்ஜஸ்ட்மெண்ட் நடந்தது என்று தெரியவில்லை. சூசை மறுபடி இயக்கி காட்ட பரசுராம் கவனமாய் கேட்டுக் கொண்டு நேற்று குதித்த உடையில் மோட்டர் படகு இயக்கினான்.

ஆத்தா ஆத்தா என்று அப்படியே சொல்லிக் கொண்டிருந்தான்.

கூட்டம் கூடியது.

ஏரி காலியா இருக்கே சார்.

காலைல காலியாதான் இருக்கும். இன்னும் தரலையே போட் விடறதுக்கு.

கொடுத்துருங்களேன். நாலைஞ்சு போட்டு இருந்தாதான் நல்லா இருக்கும். வளைஞ்சு வளைஞ்சுவிடலாம்.

அதுக்கு வேற இடம் பாருங்க. நான் பாட்டுக்கு ஆள் விட்டு நீங்க ஓட்டி கவுத்துட்டா மறுக்கப் பட்டது.

நம்ம ஆளுங்கோ நாலைஞ்சு பேர் போட்டோட உள்ள வுடுங்க சார்.

யூனிட் ஆளா, நேத்து கதை கேட்டவன் எவனா போவானா. பேய் பார்த்த கதைய சேர் போட்டு உட்கார்ந்து சொல்லிட்டு இப்ப போட் விட ஆள் கேட்டா எப்படி.

இரண்டு போட்டாவது அனுப்புங்க சீனு சார்.

இந்த யூனிட்ல ப்ரொஜக்ஷன் பார்க்கறதுக்கு பேயா அலையலாம். யாருப்பா யார்னா ப்ரீயா போட்ல போறீங்களா. சினிமா ஷுட்டிங்ல கலந்துக்கிறீங்களா.

போட்கிளப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்த மணிவண்ணன் காதில் வந்து உரத்த அறிவிப்பு விழுந்தது.

இத்தனை நாள் ஊட்டியில் இருந்தும் ஒரு ஷுட்டிங்கில் கூட நடித்ததில்லை. இன்று விமலாவுக்காக புது ஸ்வெட்டர் போட்டுக் கொண்டு வந்திருந்தான்.

விமலா தன் காதலுக்கு சரி என்று இத்தனை சுலபமாய் ஒத்துக் கொள்வாள் என்று நினைக்கவேயில்லை. சடேரென்று மழை பெய்து குளிரில் நடுங்கும் சந்தோஷம் அவள் ஏற்றுக் கொண்டதும் வந்து விட்டது.

என்ன செய்யணும் சார்.

போட் ஓட்டணும்.

நடிக்க வேணாமா.

அது டைரக்டர் சொல்வாரு.

க்ளோசப் உண்டா சார்?

செய்துடலாம். போ போய் நல்ல போட்டா எடுத்து ஓட்டுங்க. துடுப்பு போட் போறும். இரண்டு துடுப்பு போட்டுரு டிக்கட் தாங்க சார்.

டிக்கட் வேணாம் எடுத்துகிட்டு போங்க.

சூசை ஒரு படகு, மணிவண்ணன் ஒரு படகு என்று ஏறினார்கள். சூசையை விட மணிவண்ணன் வேகமாய் துடுப்புப் போட்டான்.

பாலு வீட்டுக்கு வெளியே வரும் போது வாத்தியார் எதிர்பட்டார்.

வாங்க.

இன்னிக்கு நாள் நல்லா இருக்கு.

எதுக்கு

பொண் பார்க்க வரேன்னு வரவேயில்லீங்களே.

அம்மா பார்த்தாச்சில்ல

நீங்க பார்க்க வேணாமா?

பார்க்கணும் வீட்டுக்கு வந்து பெண் பார்க்க மனசு ஒப்பலை.

வேற எங்கனா பார்த்து பேசலாம்ன்னு நினைக்கிறீங்களா.

அது தப்புங்களா?

தப்பு இல்லை. நானும் மாடர்ன்னான ஆளுதான்.

அம்மாவுக்குமே ரொம்ப பிடிச்சுப் போச்சுங்க. அது போதும் எனக்கு.

அது வெச்சு கல்யாணம் நடத்த முடியாதே. எம் பொண்ணு உங்களை பார்க்கணுமே.

இன்னிக்கு ஷுட்டிங் போட் கிளப்பல, நான் போவணும்.

என்ன ஷுட்டிங்.

போட் சேஸ்.

எப்ப

இப்ப காலைல.

என் பொண்ணை போட் கிளப் வர சொல்லட்டுங்களா.

நீங்களும் வாங்க. அவங்க தனியா வர கஷ்டப்படலாம்.

வாத்தியார் நிமிர்ந்து பாலுவைப் பார்த்தார். இவன் நல்ல பையன். என்று தீர்மானித்தார்.

நான் கூட்டிகிட்டு வரேங்க. இப்பமே ஒரு ஆட்டோ புடிச்சு... கூட்டிகிட்டு வரேன். திரும்பி நடந்தார்.

என்னடா வாத்தியார் வந்துட்டுப் போறாரு. வின்செண்ட் பின்னால் வந்தான்.

பொண்ணை கூட்டிகிட்டு வறாராம். போட் கிளப்புக்கு.

இன்னிக்கும் லீவு போட்டுறு.

ஏண்டா.

ஒருவேளை, அந்தப் பொண்ணு இரண்டு மூணு மணிநேரம் பேசணும்னா, ஆபீஸ்ல உட்கார்ந்தா பேசுவே.

ஷுட்டிங் இருக்கே.

ஒன்அவர். அப்பறம்.

இப்ப போய் லீவு சொல்லிடறேன். மேனேஜர் கொடுப்பானா தெரியலை.

கொடுப்பான். ஷுட்டிங் நடக்குதில்லை. நீ இருந்தாதான் கஷ்டம் அவனுக்கு.

நடந்தார்கள்.

டேய் மணிவண்ணன் போட் ஓட்டறாண்டா.

ஏன் தனியா போறான்.

ஷுட்டிங் ஆரம்பிச்சுருச்சு போல.

ஐநூறு ரூபா வாங்கணும். சீங்கிரம் வா.

நேத்து பேய் பார்த்தமே.

பேய் இல்லை அது.

எப்படி சொல்றே?

பேய் செருப்பு போடுமா?

என்னடா சொல்றே?

அந்த பொண்ணு விழுந்த போது செருப்பு எகிறிச்சு பார்த்தேன்.

அப்ப யார் அது

விமலா

விமலாவா.

ஒதுங்க வந்துருக்கு தபதபன்னு நாலு ஆம்பளைங்க ஓடி வந்தமா சேறு எடுத்து வீசியிருக்கா.

எங்க

எம்மூஞ்சில

நெசம்மாவா.

நீ ஏன் நின்னுட்டே.

ஒன்னுக்கு வந்துருமோன்னு பயம். திரும்பி நின்னுட்டேன்.



அதேதான். அந்தப் பொண்ணுக்கும் கோளாறு.

எப்படி சொல்றே.

வீச்சம் வந்தது.

அடபோடா அது பேய்.

இப்ப போய் அங்க பார்க்கலாம் வா.

என்னா பார்க்கறது.

நீ போ. நான் லீவு சொல்லிட்டு வந்துடறேன். மணிவண்ணன் நல்லா படகு ஓட்டறாம்பா.

நண்பர்கள் எதிர் எதிர் திசையில் பிரிந்தார்கள்.

லீவா எதுக்கு மேனேஜர் கேட்டார்.

பெண் பார்க்கப் போறேன் சார்.

வெரிகுட் நல்லபடி போய்ட்டு வா. லெட்டர் எழுதி கொடு.



எழுதி கொடுத்து சம்மதம் என்று கையொப்பம் வாங்கிக் கொண்டு சம்பந்தப் பட்ட கிளார்க்கிடம் கொடுத்து விட்டு படியருகே வந்தான்.

வாத்தியார் பெண்ணோடு ஆட்டோவிட்டு கீழே இறங்கினார்.

பளிச்சென்று இருந்தாள்.

பாலுவை நோக்கி வந்து கை கூப்பினார்கள்.

எம் பேர் சரஸ்வதி. வணக்கம்.

பாலுவை வெட்கம் தாக்கியது.

வணக்கம். வாங்க.

அப்பாவுக்கு மார்க்கெட் போணம்.

போட்டு மே.

நான் உங்களோட தனியா இருக்கலாமா.

எங்க உங்களுக்கு சரின்னா...

அதுக்கு இல்லை. நீங்க வேலை செய்யற இடம். யாரும் எதுவும் சொல்வாங் களா.

மாட்டாங்க. இன்னிக்கு லீவு போட்டுட்டேன்.

என்ன ஷூட்டிங்.

எதோ தமிழ் படம்.

பேர் என்ன?

கில்லர்.

தமிழ் படம்நீங்க இங்கிலீஷ்ல டைட்டில் இருக்கு.

பல இங்கிலீஷ் வார்த்தைகள் இப்ப தமிழ் மாதிரிதான்.

பஸ், லவ், ப்ரேக், ஸ்பிட், ரைட் லெப்ட் எல்லாம் தமிழ்தான். அப்படியே சொல்றப்பதான் சரியா இருக்கு.

கரெக்ட் கம்ப்யூட்டருக்கு கணிப் பொறிங்கறாங்க. அது கணக்கு மட்டும் போடும்ங்கற மாதிரி. கதையே எழுதலாம் கம்ப்யூட்டர்ல.

இங்கிலீஷ் கதை தானே.

தமிழ்ல எழுதலாம்.

தமிழ் கம்ப்யூட்டர்லியா.

கம்ப்யூட்டர் ஒன்னுதான். ஒரு ப்ளாப்பி போட்டா தமிழ்ல மாறும். பாரதின்னு பேர்.

ப்ளாப்பின்னா என்னாங்க.

எங்க சென்டருக்குவாங்க சொல்லித்தரேன்.

கம்ப்யூட்டர் கஷ்டம்ங்கறாங்களே.

ரொம்ப ஈஸி. அந்த போட் ஓட்டறதுக்கு கூட கம்ப்யூட்டர் ஆப்ரேட் பண்ண லாம். ஆர்வம் வேணும்.

பாரதின்னு எதோ சொன்னீங்களே.

ப்ளாப்பி. தமிழ் ப்ளாப்பி.

ஒன்னும் புரியலை.

பழகற வரைக்கும் புரியாத மாதிரி இருக்கும். பழகிட்டா ஈஸி. கம்ப்யூட்டர்

மேல ஒரு லவ்வே வந்துரும்.

மெல்ல வருதுங்க!

எது?

எதோ சொன்னீங்களே அது.

லவ்வா.

அவன் மௌனமாக இருந்தான் அவள் வாய்விட்டுச் சிரித்தாள். அவன் வெட்கம் அவளுக்குப் பிடித்திருந்தது.

தொலைவுலே மோட்டார் படகு உறுமத் துவங்கியது.

வின்செண்ட் அண்ணே

வின்சென்ட் பயந்து திரும்பினான்.

விமலா தோட்டக்கலை தோப்பு வழியே வந்து கொண்டிருந்தாள்.

என்னம்மா இப்படி வரே.

கொஞ்ச மேல வாங்களே பேசணும்.

என்ன வின்சென்ட் படியேறினான்.

நான் பூத் வேலைய விட்டுட்டேன்.

ஏன்

நேத்து ஆர்டர் வந்துருச்சு.

எதுக்கு?

ஆந்திரா பாங்க். நானும் அப்பாவும் இன்னிக்கு கிழ போனம். உங்க ரேவல துணிமணி வாங்கிட்டு நாளை காலைல ஹைத்தராபாத் போறம்.

கங்கிராஜுலேஷன்.

ரொம்ப சந்தோஷமா இருக்கு அண்ணா. கடவுள் இப்பத்தான் கண் திறந்தாரு.

ஏன் இப்படி வாரே.

அந்த ஆளு திட்டுவான். போறப்போ அவன் மூஞ்சில் முழிக்க விரும்பலை. மணிவண்ணன் கிட்ட பேசணும்.

அதோ பார்.

மணியா? ஏன் போட்ல போறாரு?

ஷுட்டிங் நடக்குது.

ஐயோ அதுக்கு நீச்சல் தெரியாதே.

போட் ஓட்ட நீஞ்சத் தெரிய வேணாம். நல்லா ஓட்டறான். ஆமா நேத்து ராத்திரி இங்க வந்தியா?

நீங்க வந்தீங்களா?

ஆமாம்!

ஐயோ கருமம்.

பேய்ன்னு நினைச்சோம்.

என்னையா?

உன்னையில்லை எதோ சத்தம் கேட்டது. மத்தவங்க பேய்ன்னாங்க. ஏன் சேறு தூக்கி வீசினே.

கருமம். வேற என்ன செய்வாங்க. அவசரம்ன்னு வந்தேன்.

சரி சரி. ஆனா எல்லாரும் பயந்துட்டாங்க. என்னிய தவிர. நான் பயப்ப

டலை. செருப்பு வுட்டுட்டியா.

ஆமா. வேற வாங்கிட்டேன். பழைய செருப்பு எதுக்கு. மணி எப்பவரும்.

ஷுட்டிங் முடிஞ்சு.

நான் கிளம்பணுமே. இப்ப கிளம்புனாதான் பஸ் புடிச்சு கீழ போய்,

நீ போ நான் சொல்லிக்கிறேன்.

மணிகிட்ட இன்னொன்னு சொல்லணும்.

என்ன?

எங்க வீட்டுக்குத் தெரிய வேணாம் எதுவும்.

ஏன்?

இப்பதான் வேலை கிடைச்சுருக்கு. பேங்க் வேலை எப்ப கன்பர்ம் ஆகும். எங்க போடுவாங்க தெரியலை. இதுக்கு நடுவுல லவ்டென்ஷன் வேணாம்னு பார்க்கறேன்.

லவ்வே வேணாம்றியா?

அப்படி இல்லே. மாட்டு தீவன் விக்கிற வரை அப்பா ஒத்துக்குவாரா.

அப்பாவ கேட்டா லவ்யூன்னு சொன்னே.

நான் சொல்லலை. மணி சொன்னாரு சரின்னேன்.

இரண்டுக்கும் வித்தியாசம் உண்டா.

உண்டு அண்ணே. நான் பாங்கலே வேலை செய்யறது அவருக்கு உறுத்தலா ஆயிடுச்சுன்னா. அப்பறம் எனக்கு கஷ்டம் இல்லே.

வின்செண்ட் மௌனமாய் இருந்தான்.

மணி கிட்ட சொல்லிடறீங்களா.

இப்ப வந்துடுவான்.

எனக்கு டைம் இல்லை.

ஒன் அவர்தான் ஷுட்டிங்.

ஐயோ நான் கீழ போவணும்.

சரி.

அவள் திரும்பி நடந்தாள். வின்செண்ட் மனசில் விமலா வெகுவாக கீழிறங்கினாள்.

எமிலியிடமும் இந்த தப்பு இருக்குமோ காதலித்தவனை விட்டு விட்டு வேறு யாரோ கண்காட்ட போன எமிலியும் தவறோ. செருப்பு ப்ளாக் என்று மேலே வந்தது. தொலைவில் இன்னொரு செருப்பு மிதந்தது.

நீரில் மிதந்த செருப்பை எட்டி உதைத்தான். அதுவும் தொலைவே போயிற்று. திரும்பி விமலாவைப் பார்த்தான். அவள் வேலியை கால் வைத்துத் தாண்டி தோட்டக்கலை தோட்டம் விட்டு வெளியேறினாள்.

வின்செண்ட் படகு துறை நோக்கி சோர்வாய் திரும்பினான்.

மோட்டார் போட் உறுமலுடன் கிளம்பியது.

எவனோ நடக்கறம் பார். போய் உட்கார் உட்கார் வின்செண்ட்டை நோக்கி நாற்பது பேர் கத்தினார்கள்.

வின்செண்ட் குத்திட்டு உட்கார்ந்தான். புதரில் மறைந்து கொண்டான்.

படகு நீரை கிழித்து பறந்தது. வளைந்து வளைந்து ஓடியது. பெரிய அலைகள்

இருபுறமும் பிரிந்து எழுந்தன.

சுருள் சுருளாய் கரை நோக்கி மிதந்தன.

எதிரே புது ஸ்வட்டர் போட்டு ஒரு ஆள் துடுப்பு போட்டபடி படகு நகர்த்த பரசுராம் குவனை மின்ன வேகத்தில் தாண்டினான்.

பெரிய அலை துடுப்பு படகு நோக்கி வந்து மொடேர் என்று படகுக்குள் விழுந்தது. ஸ்வெட்டர் கலைந்தது. மணிவண்ணன் எழுந்தான்.

படகு ஆடியது. அவனும் ஆடினான். அவன் ஆட படகு மேலும் ஆடியது.

மணி தடுமாறினான். இடது படகு விளிம்பில் விழுந்தான். துடுப்பு நழுவியது. துடுப்பு பிடிபோட நீட்டினான். படகு குப்புறக் கவிழந்தது. அவனை உள்ளே புரட்டி மூடிக் கொண்டது. மணிவண்ணன் உள்ளே வெகு ஆழத்தில் மூழ்கினான்.

ஐயோ என்று வின்சென்ட் கத்தினான். யூனிட் கத்தியது. பாலு கத்தினான். சரஸ்வதி கத்தினாள். பரசுராம் பின்னால் நடப்பது எதையும் கவனிக்காது மறு முனை அடைந்து படகு நிறுத்தி தாவி ஏறி கரையில் ஓடினான்.

ஆத்தா என்னைய காப்பாத்திடியடி என்று சந்தோஷப்பட்டான்.

மணி மேலே வர படகு அவனை கீழே அழுத்தியது. நுரையீரலில் தண்ணீர் புக கதறினான். யாரோ அவனை கீழ் நோக்கி பலமாய் இழுத்தார்கள்.

மேலே தண்ணீருக்கு மேலே அலை அலையாய் தெரிந்தது. பல பெண்கள் அவனை கீழ் நோக்கி பார்ப்பது போல் இருந்தது.

மணிவண்ணன் கடைசி காற்றை வெளிய துப்பினான். உடம்பு சேறில் சிக்கிக் கொண்டது. அரைமணி நேரம் யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

தேட முடியாதுங்க. கீழே சேறு எங்க போய் சொருகியிருக்கோ.

என்ன கதி.

அவ்வளவுதான்.

பாடி கிடைக்காதா?

நாளைக்கு மிதக்கும்

போலீஸுக்கு சொல்லு யூனிட் போகக் கூடாது. மேனேஜர் கத்தினார்.

நீங்கதானே அனுப்பினீங்க.

அவருதான் போறேன்னாரு. சரின்னேன்.

நான் டிக்கட் தரலை.

நான் ஷூட்டிங் நடத்த பர்மிஷன் வாங்கவேயில்லை. ஷூட்டிங்கே நடத்தலை: என்ன செய்வீங்க.

இது அடாவடி. ஷூட்டிங் நடந்ததுக்குபிலிம் சாட்சி சொல்லும்.

இது படத்துல வராது சார். அப்பறம்.

பாலு வேகமாய் மேனேஜர் நோக்கி போக சரஸ்வதி அவனை பிடித்து தடுத்தாள்.

என்னங்க.

இன்னிக்கு நீங்க லீவு.

ஆமாம்.

இதுல தலையிட வேண்டாம். போலீஸ் கேஸ்ல மாட்ட வேண்டாம்.

பாலு தயங்கினான்.

வின்சென்ட்டுக்கு அழுகை வந்தது. மெல்ல புதர் விட்டு நகர்ந்து மேடேறி னான். சறுக்கியது.

கை எட்ட முல்வேலிதான் கிடைத்தது.

பளிச்சென்று பிடித்துக் கொண்டான்.

கம்பி வேலி அங்கங்கே முள் முடிச்சாய் முடுக்கப்பட்டிருந்தது. அவன் பிடியில் ஒரு முள் முடிச்சு சிக்கியது. வலிக்கு பயந்து விட்டுவிட்டால் நீரில் விழ வேண்டியிருக்கும். இறுகப் பிடித்து பிடித்து வழுவாத கையால் வேலி பற்ற இன்னொரு முடிச்சு உறுத்தியது. உள்ளங்கை குத்தியது.

ஏன் வெறும் கம்பியாய் போடாமல் முறுக்கு முடிச்சாக்கியிருக்கிறார். கேள்வி வந்தது.

பாதுகாப்புக்கு பதில் தோன்றியது.

கை வைத்தால் கீறட்டும் என்று இரட்டைக் கம்பியை முடிச்சு முடிச்சாய் போட்டு முள்ளாக்கியிருக்கிறார்கள்.

மனிதர்களே மனிதர்களை மடக்க வேலி போட்டு முள் முடிச்சாக போட்டு தடுத்திருக்கிறார்கள். தெரியாமல் தொட்டால் கூட முள் முடிச்சு கீறும், கை குத்தும் ரத்தம் பார்க்கும்.

மனித வாழ்க்கை விசித்திரம்.

அவர்களே எதாவது செய்து, அவர்களே அதில் மாட்டிக் கொள்வார்கள். பேயே இல்லை. பேய் என்று பயப்படுவார்கள். பூமி உறுதியாய் இருக்கும். நீரிலே பாய்ந்து பாய்ந்து போவார்கள். ஏரி வற்றி போக பாதை உண்டு. படகு செய்து குறுக்கே போவார்கள். காதலிக்க ஆசைப்படுவார்கள். காதலிலேயே செத்துப் போவார்கள். லவ் யூ என்றால் சரி என்பார்கள். பிறகு வேறு இடம் பாய் மறந்து போவார்கள். பெண் பார்க்க வீட்டுக்கு போக வேண்டும். போட் கிளப்பில் பெண் பார்த்து மறந்து நிற்பார்கள்.

மனிதர்களே பிரச்சனை உருவாக்கி மனிதர்களே மாண்டு போவார்கள். உல கம் அமையானது. ஏரி மாதிரி.

ஆனால் அமைதியாய் இருந்து எதையும் மனிதர்கள் விடுவதில்லை?

கம்பி இரட்டையாய் முறுக்கி முள்ளாய் முடிச்சுப் போட்டு வேலி.

இழுத்து அறுத்து விடலாமா.

வேண்டாம் குத்தும் உள்ளங்கை கிழியும். அமைதியாய் மேலே ஏறுவோம். அமையாய் வீட்டுக்குப் போவோம்.

வின்சென்ட் வேலி வழியே நடந்து திறந்த மரங்கள் இருட்டு வழியே மேலே றினான். நடந்தான். உள்ளங்கை எரிந்தது. ரத்தப் பொட்டுக்கள் தெரிந்தன.

மனிதர் போட்ட முள் முடிச்சு, மனிதர் கையை கிழிக்கும். கிழிக்கட்டும் என்று ஒரு மனிதன்போடுவான்.எவனோ கிழிபடுவான்.

இங்கே காதல் இல்லை. உறவு இல்லை. நேசம் இல்லை.

எல்லாம் வேலி வேலியாய் முள் முடிச்சு வேலியாய் தான், தனது என்று பிரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த பூமி அமைதியானது. இந்த ஏரி அமைதியானது. மலைகள் அமைதியா னவை. மனிதன்தான் மோசம். மிக மோசம்.' எல்லா இடத்திலும் முள் முடிச்சு எல்லார் மனதிலும் முள் முடிச்சு.

— முற்றும் —

ஜி.ஆர்.தங்கமாளிகை
மேகலா
இணைந்து வழங்கும்
பரிசுத் திட்டம்



மார்ச் '93 இதழ்
போட்டி முடிவு

மலைபோல் குவிந்து விட்ட கடிதக் குவியலில் தேர்ந்தெடுக் கப்பட்ட அதிர்ஷ்டசாலி!

திருமதி.புஷ்பம்
சென்னை-1.

## இம்மாதப் போட்டி

கல்யாண வீடுகளில் ஏதாவது சுவாரஸ்யமான கலாட்டா நடப்பது சகஜமான விஷயம்! உங்களுக்கு தெரிந்த கலாட்டாவை சுவையாக எழுதி அனுப்புங்களேன். ஜி.ஆர். தங்கமாளிகை தரும் ஒரு பவுன் பரிசைப் பெறுங்களேன்...

உறை மீது முகவரிக் கூப்பன் ஒட்டி 31.5.93க்குள் அனுப்பிட மறவாதீர்கள்.

கல்யாண கலாட்டா,
"மேகலா"
த.பெ.எண்: 1251,
சென்னை - 600 034.

# பட்டர்ஃபிளை
## மேகலா
## இணைந்து வழங்கும் பரிசுத் திட்டம்

மழலையின் குறும்புகள் - போட்டியில் வெற்றி பெற்று 10 லிட்டர் பட்டர் ஃபிளை பிரஷர் குக்கரை பரிசாகப் பெறும் சம்பவம்:

### டாக்டர்... டாக்டர்...

திருச்சியிலுள்ள என் உறவினர் வீட்டில் ஜெரின், இமயா என்று இரண்டு பெண் குழந்தைகள் உண்டு. இரண்டும் ரொம்ப துடுக்கு.

ஒரு முறை அவர்கள் வீட்டிற்கு சேகர் என்ற எங்கள் குடும்ப நண்பர் ஒருவர் வருவதாக கூறியிருந்தார். அவர் Ph.D. படித்த பேராசிரியர். எனவே அவரை டாக்டர் சேகர் என்றுதான் எல்லோரும் அழைப்பது வழக்கம்.

''டாக்டர் சேகர் இன்னைக்கு வர்றார்'' என்று எல்லோரும் பேசிக் கொண்டிருந்தோம். அன்று மாலை டாக்டர் சேகரும் வந்தார்.

அவர் வந்ததுமே இரண்டு குழந்தைகளும் நைஸாக அடுத்த வீட்டிற்கு



ஓடி விட்டனர். டாக்டர் சேகரோ குழந்தைகள் எங்கே? குழந்தைகள் எங்கே என்று அடிக்கடி கேட்க... நான் பக்கத்து வீட்டிற்கு போய் குழந்தைகள் இருவரையும் அழைத்தேன். ஆனால் இரண்டு பேருமே பிடிவாதமாக வர மறுத்து விட்டனர்.

என்ன காரணம் என்பதே புரியாமல் சிறியவளான இமயாவை மட்டும் பிடிவாதமாக தூக்கினேன். உடனே ஜெரின், ''இமயா போகாதடி. அங்க

# மழலையின் குறும்புகள்

டாக்டர் இருக்கார். ஊசி போட்டுடுவார்.'' என்று கூற அப்போதுதான் அவர்கள் இருவரும் ஓடி மறைந்த காரணம் புரிந்தது.

முனைவர் பட்டம் பெற்றவரை, அவர்கள் மருத்துவப் பட்டம் பெற்ற டாக்டராக நினைத்துக் கொண்டு பயந்து ஓடியிருக்கிறார்கள். அதன்பிறகு அவர்களின் பயத்தைப்போக்க போராடி, அவர்களை வீட்டிற்கு அழைத்து வந்து விஷயத்தை விளக்கியபோது டாக்டர் உட்பட அத்தனை பேரும் விழுந்து, விழுந்து சிரித்தோம்.

— கே.கலாவதி
சுப்பிரமணியபுரம்

## ஆறுதல் பரிசு ரூ.100/- பெறும் இரண்டு குறும்புகள்:

## இரண்டு வயசுக்கு முன்னால...

எங்கள் வீட்டினருகில் ஒரு மராட்டிய குடும்பமிருந்தது. அங்கு சுதிர் என்ற ஐந்து வயது சிறுவனும், சௌம்யா என்ற மூன்று வயது தங்கையுமிருந்தனர். சௌம்யாவிற்கு எது வாங்கித் தந்தாலும், உடனே அதை சுதிர் எடுத்து விளையாட ஆரம்பிப்பான். ஒருநாள் அவன்தாய், 'ஏண்டா எதைப் பார்த்தாலும் எனக்கு எனக்குன்னு அலையறே? அவளுக்கு ரெண்டு வருஷம் முன்னாடி பிறந்து அந்த ரெண்டு வருஷம் எல்லாத்தையும் நீ அனுபவிச்சே இல்லே?! இப்ப இவளுக்கு விட்டுக் கொடுத்தா என்னவாம்?'' என்று கேட்க,

உடனே சுதிர் சற்றும் யோசிக்காமல் கோபமாய் அவன் தாயைப் பார்த்து,



''அவளுக்கு ரெண்டு வருஷம் முன்னாடி நான் செத்துப் போயிடுவேனே அப்போ அவதானே அனுபவிப்பா'' என்றானே பார்க்கலாம்.

— ஷோபா சப்தரிஷி,
ஒசூர்

## செருப்பில்லாத சிங்கம்

என்னுடைய பேத்தி மின்னி. (மேனகா) மிகவும் புத்திசாலி. 2 வயதிலேயே மிகவும் தெளிவாகவும் அறிவு பூர்வமாகவும் பேசுவாள். அவளுக்கு கதை கேட்பதில் மிகவும் ஆர்வம்.

ஒருநாள் நான் சிங்கத்தின் காலில் முள் குத்தின கதையைச் சொல்லிக் கொண்டிருந்தேன். ''இரு பாட்டி, சிங்கம் காட்டுக்கே ராஜா. எல்லா மிருகங்களும் சிங்கத்தைப் பார்த்து நடுங்கும். அந்த சிங்கத்துக்கு காலில் செருப்பு போட்டுக் கொள்ளனும் என்பது ஏன் தெரியாது?'' என்றாள்.



''காட்டில் செருப்பு ஏது மின்னி?'' என்றேன்.

''காட்டில்தான் நிறய மரம் செடி எல்லாம் இருக்குமே?! அதிலே இருந்து நாலஞ்சு இலையை பறிச்சு காலில் கட்டி நூலைக் கட்டிண்டா முள்ளு எப்படிக் குத்தும்?'' என்று மின்னி முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு கேட்க அத்தனை பேரும் விழுந்து விழுந்து சிரித்தோம்.

— விஜயா ராமகிருஷ்ணன்,
பம்பாய்

## இம்மாதப் போட்டி

மேகலா - பட்டர் ஃபிளை இணைந்து நடத்தும் இம்மாதப்போட்டி - பள்ளியறை சுவாரஸ்யம். தப்பான அர்த்தம் எடுத்து விடாதீர்கள் - பள்ளி, கல்லூரியில் நடந்த சுவாரஸ்யமான விஷயத்தை 'நறுக்'கென்று எழுதி 31.5.93க்குள் கூப்பன் ஒட்டி அனுப்புங்கள்.

...றை சம்பவம்,
...லா
...எண்: 1251,
சென்னை - 600 034.

# வாசகர் மைதானம்

## கொள்கை பிடிப்பு!

ஒரு ரயில் பயணத்தின் போது நடந்த சம்பவம். யாசகர் ஒருவர் இயேசு கிறிஸ்து பாடலை பாடியபடி யாசகம் கேட்டு வந்தார். எனக்கு முன்பு அமர்ந்திருந்த இளைஞர் கும்பல் அவரை சினிமா பாடல் பாடும்படியும் நிறைய காசு தருவதாகவும் சொல்ல அவர் அதை மறுத்து, ''என் தேவனை துதித்து பாடுவதை தவிர வேறெதுவும் செய்யேன்'' என்றார். ''அப்படீன்னா உனக்கு காசில்லே... போ!



பட்டினி கெட'' என அவர்கள் கூற, அந்த யாசகர் சிரித்தபடியே ''என் தேவன் என்னைக் கைவிட மாட்டான். அப்படியே அது அவன் சித்தமெனில் என் பாக்யம்'' எனக் கூறி பழையபடி கணீரென கிறிஸ்துபாடலை பாடிய படியே நகர்ந்து போனார். அவருடைய உறுதியும், கொள்கையும் என்னை ஆச்சர்யமுடன் சந்தோஷப் படவைத்து விட்டது.

— வடமாலவன்,
தோட்டப்பாளையம்.

## தொலைக்காட்சி கவனிக்க!

தொலைக்காட்சி மக்களின் வாழ்வில் இன்றியமையாத அம்சமாகி விட்டது. விளம்பரங்களை விரும்பிப் பார்க்காத குழந்தைகளே இல்லை. வெறுப்பூட்டும் விஷயம் என்னவெனில், பெண்களுக்குரிய அந்த '3' நாட்களுக்குரிய சானிட்டரி நாப்கின்கள், நிரோத் போன்ற விளம்பரங்களை ஒளியும், ஒலியும், திரைப் படம் போன்ற நிகழ்ச்சிகளோடு ஒளிபரப்புகிறார்கள். அது என்ன? என்று கேட்கும் சிறு குழந்தைகளுக்கு விளக்கம் தர முடியாமல் திணற வேண்டிய நிலை! ஒரு குழந்தை



''அம்மா எனக்கு விஸ்பர் சாக்லேட் வாங்கிக் கொடு'' ன்னு அடம் பிடித்ததாகவும் செய்தி. இந்த மாதிரி அடல்ட் விளம்பரங்களை இரவு 9 மணிக்குமேல் ஒளிப ரப்பினால் என்ன?!

— எஸ்.ப்ரியா,
பாளையங்கோட்டை.



## ஹலோ மைடியர் ராங் நம்பர்...

தற்செயலாக ராங் நம்பர் வருவது ஒருவகை. ஏதாவது ஒரு நம்பருக்குப் போன் செய்து தொல்லை தருவது மற்றொரு வகை. பொழுது போகாமல் ஏதாவது ஒரு நம்பரை சுழற்றுகிறார்கள். ராங் நம்பர் என்றால்... 'தெரியும், போரடிக்குது. சினிமாவோ, அரசியலோ பேசலாம்' என அடம் பிடிக்கிறார்கள்.

சமீபத்தில்... ஒரு முக்கியமான விஷயத்தை வீட்டில் விவாதித்துக் கொண்டிருந்தோம். போன் அடித்தது. ''உங்கள் வீட்டில் கிரைண்டர் நன்றாக ஓடுகிறதா?'' என்று எதிர்முனையில் குரல். கிரைண்டர் சரிசெய்பவர் யாருக்கும் அப்படி நாங்கள் தகவல் தரவில்லையே என்ற குழப்பத்துடன், ''நல்லா ஓடுதே'' என்றேன்! ''அப்படி என்றால் முதல்ல ஓடிப்போய் அதைப் பிடிங்க'' என்று ஃபோனை வைத்து விட்டார்கள். தன் நகைச்சுவை உணர்வை வெளிப்படுத்தும் எண்ணம் இருந்தால்... நண்பர்கள், உறவினர்களிடம் ஜோக்கடிக்கட்டுமே! அந்நியர்களிடம் இப்படி அசட்டுத்தனமாகப் பேசி அவர்களின் நேரத்தை வீணடிப்பதைத் தவிர்க்கலாமே!

— டி.ஆர்.மகேஷ்,
மதுரை-1.

## ஆண்களே அலையாதீர்கள்...

நான் சமீபத்தில் ஒரு திரைப்படத்திற்கு விமர்சனம் எழுதி இருந்தேன். அது என் முழுமுகவரியோடு பத்திரிகையில் வெளியிடப் பட்டு இருந்தது. அம்முகவரி வந்த 10 தினங்களுக்குள்



500-க்கும் மேற்பட்ட கடிதங்கள் எனக்கு வந்தன. வாழ்த்துக் கடிதங்கள், பாராட்டுக் கடிதங்கள், நன்றிக் கடிதங்கள் குறிப்பிட்ட நடிகரின் ரசிகர்கள் எழுதி இருந்தனர்.

கண்டனங்கள்... வசவு மொழி... இவைகளை தாங்கி அந்த நடிகரை எதிர்த்தும் வேறு சில நடிகர்களை பாராட்டியும் கடிதங்கள் வந்தன. இவை ஆபாசக் களஞ்சியமாக இருந்தன.

விமர்சனம் என்பது தனிப்பட்ட ஒருவரின் உரிமை, ரசனை. மற்றவர்களிடமிருந்து மாறுபடக் கூடியது. அப்படியிருக்க முழு முகவரி கிடைத்து விட்டது என்பதற்காக இப்படி எழுதலாமா? இது என்ன நாகரிகம்?

பெண்களின் முகவரியைக் கண்டால் சில ஆண்கள் இப்படி எழுதுவது வெட்கப்படக் கூடிய ஒன்று... கண்டிக்கத்தக்க ஒன்று!

ஆண்களே... பெண்களின் முகவரிக்காக அலையாதீர்!

— இந்திராணி சண்முகம்,
திருவண்ணாமலை.



## மே ஐ கம் இன்?!
## May I come in

பாலகுமாரனின் திக் விஜயம்

மாதம் ஒரு வாசகர் வீட்டுக்கு பாலகுமாரன் திடீர் விசிட் செய்வார்.

ஓர் இனிய மாலைப் பொழுதில் உங்கள் இல்லத்தில் ஒருவராக பேசி மகிழ்ந்து உணவருந்திச் செல்வார்.

யாருக்கு அந்த வாய்ப்பு?

விவரம்... ஜூன் 1 இதழில்!

மேகலாவில் ஒரே மாதத்தில் வெளியாகும் இரண்டு நாவல்களையும் விமரிசித்து கடிதம் எழுதும் புத்திசாலி வாசகர் வீட்டுக்கு பாலகுமாரன் விருந்தாளியாக விஜயம் செய்வார்.

# மாதம் ஒரு பத்திரிகையாசிரியர்




பஞ்சாப்!

பெயர் சொன்னதுமே அங்கு பற்றி எறியும் வன்முறை நெஞ்சில் விரியும்.

நாளொரு குண்டு வெடிப்பு! பொழுதொரு துப்பாக்கிச் சூடு!

தனிமனிதர் வெளியே தலை காட்ட முடியாத சூழல்.

ஒரு பெண்மணி தயக்கம் உதறி... அச்சம் அகற்றி பரபரப்பு பகுதியில் கால் பதிக்கிறார்.

தன் தேவைக்கு அதிகமாகவே செய்திகளை சேகரிக்கிறார். கொடூரப் புகை சூழ்ந்த பகுதிகளை கண்களுக்குள் படமெடுக்கிறார்.

திருப்தியுடன் தங்கியிருந்த ஓட்டலுக்குத் திரும்புகிறார்.

சற்றுமுன் தான் சென்று வந்த

# இந்தியா டுடே வாஸந்தி

பகுதியில் குண்டு வெடிப்பு! செய்தி அறிகிறார். சிலிர்க்கவில்லை. சிரிக்கிறார்.

யதார்த்தமான அவரது புன்னகை கண்டு அருகிலிருந்தோருக்கு வியப்பு!

''ஆமாம்... இது நான் எதிர்பாராதது அல்ல. நெருப்பு குளிரவா செய்யும். வன்முறையின் லீலை இப்படித்தான் இருக்கும்.'' ஆசுவாசமாகப் பதிலளிக்கிறார்.

யார் இந்த தைரியப் பெண்மணி?

வாஸந்தி.

ஆமாம் எழுத்தாளர் வாஸந்திதான். சென்றது பத்திரிகை ஒன்றின் கட்டுரைக்காக. இவரது இன்னொரு முகம் பத்திரிகையாளர் வாஸந்தி. இவர் அணிந்து கொண்டுள்ள அண்மை முகம் 'இந்தியாடுடே தமிழ் இதழாசிரியர்' வாஸந்தி.

பற்றி எரிகிற பஞ்சாபில் மட்டுமல்ல, இடியும் மின்னலும் நிறைந்த இலங்கைக்கும் சென்றுவந்திருக்கிறார்... இதே சூழலில்.

எவரைப் பற்றியும் பூர்வீகம் தெரிந்து கொள்வது தவிர்க்க முடியாத அரிப்பு.

இந்த வாஸந்தி...யின் பின்னணி?

வாசகர்களின் சுவாரஸ்யம் கருதி வாய் திறக்கிறார். ''நான் பிறந்தது வளர்ந்தது படித்தது எல்லாம் கர்நாடகத்தில் - பெங்களூரில்தான். என் அப்பா மதுரைக்காரர். அம்மா கன்னடக் குடும்பம்

அப்பா காட்டன் மில்ஸில் மேனேஜர். அந்த மில்ஸ் கோவில்பட்டி, குடியாத்தம் என்று ஊரகப் பகுதியில் இருந்தன. அங்கிருந்து கொண்டு நான் நல்ல படிப்பு படிப்பது என்பது அசாத்தியம் என்று உணர்ந்தார். என்னை எங்க பாட்டி வீட்டிலிருந்தபடியே படிக்கச் செய்தார். பாட்டி வீட்டில் மூன்று தலை

முறையாக கர்நாடகவாசம். கன்ன டம் புழக்கம். தமிழும் பேசுவார்கள். என் அப்பாவோ நான் தமிழ் படிக்க வேண்டும் என்று விரும்பினார்.

''பெங்களூரில் நான் சேர்ந்த கமலாபாய் ஸ்கூலிலும் சரி... மவுண்ட் கார்மல் காலேஜிலும் சரி... ஆங்கிலமே போதனா மொழியாக இருந்தாலும், தமிழை இரண்டாவது மொழியாக எடுத்துப் படித்தேன். எனக்கு சிறுவயதிலிருந்தே மொழி மீது ஆர்வம். எனவே தாகத்துடன் படித்து நிறைய தெரிந்து கொண்டேன்.''

தெரிவிக்கிறார்.

படித்துப் பட்டம் பெற்றது சரி.

எழுத்தார்வம்... எப்போது எப்படி வந்தது?

அநேகம் பேர்களுக்கு இந்த ஆர்வம் சிறுவயதிலேயே சிறுபொறியாக வீசப்பட்டு பின் ஒளிப்பிழம்பாக விரிவதுண்டு. இவருக்கு...?

''உண்மையைச் சொன்னால் எனக்கும் சின்ன வயதிலிருந்தே எழுத வேண்டும் என்ற பொறி மனசில் படுவதுண்டு. அதன் விளைவுதான்... பள்ளி, கல்லூரியில் கட்டுரைகள் நிறைய - நிறைவாய் எழுதி ஆசிரியர்களின் பாராட்டுக்களைப் பெற்றது. அந்தப் பாராட்டுக்களை தக்க வைக்கும் முயற்சியில் நிறைய படிப்பேன். விவாதிப்பேன்...''

இடைமறிக்கிறோம். யாருடன் விவாதம்!

''எங்க தாத்தா பாட்டியுடன் தான். இன்னொரு முக்கியமான விஷயம். நான் எழுத்து - இலக்கியம் இவற்றை நேசிக்கக் காரணமே எங்க தாத்தா - பாட்டிதான். எங்க தாத்தா நல்ல படிப்பாளி தத்துவம் - இலக்கியம்னு அவர் படிச்சதை எங்களுக்கும் விளக்கிச் சொல்லி ரசிக்க வைப்பார். நல்ல நல்ல... கதை கவிதைகளை எங்களுக்கு உரக்கப் படிச்சு காட்டி ரசனையை வளர்த்தார்.

ஆக... சிந்தனைத்தீ... சிறுவயதிலேயே மூட்டியாயிற்று.

''எங்க குடும்பம் பெரிசு. எங்க தாத்தாவின் மகள் வயிற்றுப் பேரன் - பேத்தி - மகன்வயிற்றுப் பேரன் - பேத்திகள் என்று வீடே நிறைந்திருக்கும். தினசரி... ஏதாவது ஒரு விவாதம் களைகட்டும். தெரிந்த ஆதாரங்களுடன் அனைத்துக் குழந்தைகளும் களத்தில் இறங்குவோம். இந்த விவாதத்தின் போக்கை தாத்தா ரசிப்பார். தட்டிக் கொடுப்பதுண்டு; முடுக்கி விடுவதுண்டு. இதுவே தாத்தாவையே எதிரணியில் நிறுத்தும் அளவுக்கு வளர்ந்தது.''

சிறுவயதிலேயே உலக அரசியலிலும் ஆர்வம் துளிர்த்ததாகக் கூறும் வாஸந்தி, தன் பாட்டி சிறந்த சகி விமர்சகி... என்கிறார். பாட்டி ஒரு சிறந்த கலா ரசிகை. கதாகாலட்சேபப்ரியை என்பதுடன் அவர் மூலம் தன் எண்ணம் விஸ்தாரமானது என்றும் தெரிவிக்கிறார்.

தன் வீட்டு இலக்கிய சூழல் தனக்கு பரந்துபட்ட இலக்கிய அறிவையும் அனுபவத்தையும் அளித்தது என்கிற வாஸந்தி, தினம் தினம் வீட்டில் நடக்கும் இலக்கிய சர்ச்சைகள் - அரசியல் விவாதங்கள் வளர்ந்து ஒரு தீர்க்கமான பார்வையை தனக்குள் வரவைத்தன என்று கூறுகிறார்.

எதைப் படித்தாலும், கேட்டாலும், விவாதித்தாலும் தனக்கென ஒரு தனி முடிவு - கொள்கை இருக்க வேண்டும் என்பது தாத்தாவின் கொள்கை. இப்படிப்பட்ட தனி ஆளுமையுடன் வளர தனக்கு தாத்தாவின் பயிற்சியே காரணம் என்கிறார்.

எதையும் தெரிந்து தெளிய வேண்டும் என்பது வாஸந்திக்கு

புகட்டப்பட்ட பாடம். எனவேதான் இலக்கியம் தவிர இசை, நாட்டியம், ஓவியம் போன்றவற்றையும் கற்று வைத்திருக்கிறார். இதில் ஏதாவது ஒன்றைத்தான் கடைசிவரை தொடர வேண்டும். சாத்தியமும் கூட.

யோசித்தபின், எடுத்த முடிவு. பேனா பிடிப்பதென்று.

விளைவு?

எழுத்தாளர் வாஸந்தி.

பங்கஜம் என்ற இளம் பெண் அப்போது டீன் ஏஜில்தான் இருந்தார். தான் சந்தித்த அனுபவம் அடிமனத்தைப் பாரமாக அழுத்துகிறது. அதை யாரிடமாவது வெளிப்படுத்த ஆசை. பக்கத்தில் சொன்னால் கௌரவப் பிரச்சினையாகிவிடும். மனதில் குடைச்சல் எப்படியாவது இறக்கி வைக்க வேண்டுமே?

தாளையும் பேனாவையும் எடுக்கிறார். எழுதி அனுப்புகிறார் விகடனுக்கு. தெரிந்தவர்கள் பார்த்தால் பிரச்சினை ஆகக் கூடும் என்று பெயரை மாற்றி அனுப்புகிறார். பிடித்த பெயர் வசந்தியை வித்தியாசம் கருதி வாஸந்தி என்று மாற்றி - அந்தப் பெயரில் அனுப்பி வைக்கிறார்.

இதுவே பங்கஜம் வாஸந்தியான வரலாறு.

அப்போது விகடன் வாரந்தோறும் முத்திரைக்கதை என்று ஒரு சிறந்த கதை வெளியிடுவர்

என்ன ஆச்சர்யம். அனுப்பிய பத்தே நாளில் முத்திரைக் கதையாக வந்தது. கதை பெயர்: 'பிராயசித்தம்' அதுமுதல் வாஸந்தி பெயரும் பிரசித்தம்.

முதல் கதையே பிரசுரமாகியதில் மகிழ்ச்சி அடைந்தார் பங்கஜம் - வாஸந்தி. அடுத்து இன்னொரு கதை



அனுப்ப அதுவும் முத்திரைக் கதையாகியது. பெயர்: 'பசி வந்திட'. அடுத்தடுத்த சமயங்களில்... வந்த விகடன் மகளிருக்கான 'சிறுகதைப் போட்டி'யில் மூன்றாம் பரிசு. அதற்கு பல பத்திரிகையாசிரியர் நடுவர்கள். மூன்றாம் பரிசு பெற்றாலும் அனைவரது கவனக் கண்களும் இவர் மீது விழ, பிற பத்திரிகையிலிருந்தும் அழைப்புகள் - எழுதச் சொல்லி!

முதல் கதையே பிரசுரமானதில் அட இவ்வளவுதானா எழுத்து என்று நினைக்கத் தோன்றியதா? எழுத்தாளராவது மிகவும் சுலபம் என்று சொல்லத் தோன்றியதா?

''இல்லை. அது... சுலபம் என்று சொல்லத் தோன்றவில்லை. அதில்... ஏதோ ஒன்று பொறிதட்டின மாதிரி விஷயம் இருப்பதாக எனக்குப் பட்டது. அதனால்தான் அதை அனுப்பினேன். மெச்சூரிடி இருக்க வேண்டியது பிரசுர தகுதிக்கு முக்கியம் என்பது என் அபிப்ராயம். என் முதல் கதையை படித்து விட்டு திருச்சி ஆல் இண்டியா ரேடியோவிலிருந்து நண்பர் மாறன் என்பவர் கடிதம் போட்டிருந்தார். பிறகு நான் என் கல்யாணப் பத்திரிகை அனுப்பி இருந்த போது, ''அட நீங்கள் ரொம்ப வயதானவர் என்றல்லவா நினைத்திருந்தேன். அந்த அளவுக்கு உங்கள் கதையில் முதிர்ச்சி இருந்தது ஆச்சரியமாக இருக்கிறது'' என்று எழுதியிருந்தார்.

திருமணம் முடிந்ததும் டில்லிக்குப் போக வேண்டியதாயிற்று.

கணவர் (CPWD) சி.பி.டபிள்யூ.டி.யில் இன்ஜினியர். டில்லியில் பணி.

மணமானபின், டில்லிவாசம். பின் பல வெளி மாநிலங்களுக்கு மாற்றல். மிஜோராம், கல்கத்தா, மேகாலயா, ஷில்லாங், அருணாசலப் பிரதேசம் என்று மாறி மாறி - நேபாளத்தில் பணி கணவருக்கு. அங்கே தலைமை என்ஜினியர்.

எனவே வீட்டில் வேலைக்கு ஆட்கள், வசதிகள் என்று குடித்தனம் சுலபமானது.

நிறைய நேரம் மிச்சமானது.

நிறைய படித்தார். எழுதினார்.

நேபாளத்தில் தங்கியிருந்த நான்கு ஆண்டுகளும் தன் எழுத்துலக பொற்காலம் என்கிற அளவுக்கு நிறைய்ய நேரமிருந்தது. நிறைய்ய எழுதினார்.

திருமணமான பின் 13 ஆண்டுகள் தீவிரமாக எழுதாத வாஸந்தி ஆண்டுக்கொரு சிறுகதை என்கிற அளவில்தான் தொடர்ந்து வந்தார். ஆனால் இவரது அம்மா மட்டும், 'எழுத்து எல்லாருக்கும் வராது. அது ஒரு கலை... வரம். தொடர்ந்து எழுது' என்பாராம். பல மாநிலங்களில் மாற்றலாகி. வசித்தது... பல பண்பாட்டு அம்சங்கள், பல புவியியல் - நாகரிகப் பின்னணியை அறிந்து கொள்ள - கதைக்கு தாளம் அமைத்துக் கொள்ள வாய்ப்பாக அமைந்தது.

பெண்கள் பெண்மை பற்றி புதிய பார்வையில் அறிவார்த்தமான சிந்தனை வாஸந்தியின் மனதை உலுக்கி விட... ''சிறகுகள்'' என்ற கதை பிறந்தது.

விகடனில்... 15 அத்தியாயம் வந்த அது... பல வாசகர்களின் மனதில் கேள்விச் சிறகுகளை படபடக்க வைத்தது. விகடனில் ஜே.எம்.சாலி என்பவரின் ஊக்கத்தில்தான் இந்தக் கதை எழுதி அனுப்பியதாகக் கூறுகிறார்.

''சிறகுகள்...'' வாசகர்கள் மத்தியில் ஒரு புதிய குரலாக அறிமுகமானது.

இவரது முகம் தெரியாமலேயே இவரது கதைகள் பல்வேறு இதழ்களின் வாசகர்களுக்கு அறிமுகமானது.

மீண்டும் டில்லிக்கு கணவரின் பணி நிமித்தமாக வந்த வாஸந்தி... இன்றுவரை டில்லி வாசிதான். இவ



ரது பிரபலம் என்னவென்று அறியாத புதிருடன் டில்லிக்கு வந்தார்.

இவர் எதிர்பார்த்ததற்கு மேலாகவே வாசகர்களைச் சென்றடைந்திருக்கிறார் என்பதை வீடு தேடி வந்த கடிதங்களைக் கண்டுதான் உணர்ந்து கொண்டார்.

பல்வேறு பகுதியில் வசித்ததை விட டில்லியில் வசித்த போது த்ரில்லிங்கான அனுபவம் கிடைத்தனவாம். நாட்டு தேசியப் பிரச்சினையின் தீவிரத்தை கண் முன் காணும் வாய்ப்பு டில்லியில் இருந்த போதுதான் கிடைத்திருக்கிறதாம்.

தேசநலன் - புனரமைப்பு தேசிய பிரச்சினை பற்றிய சிந்தனையை - விவாதத்தை இவருக்கு,

பல்வேறு சூழல்களில் தீயாக மூட்டி யிருக்கிறதாம். அதுவே அரசியல் ஆர்வத்தை அதிகரிக்கச் செய்து...

பஞ்சாப் சென்று, நிஜமறிந்து 'கல்கி'க்கு மற்றும் வேறு ஆங்கில இதழ்களுக்கு - வெளிநாட்டு இதழ்களுக்கு கட்டுரை எழுதி பாராட்டுக்களை வாரிக் கொள்ளும் அளவிற்கு உயர்த்தியிருக்கிறது.

இவர் எழுதிய 'பெண் பீடித் தொழிலாளர்கள்' பற்றிய... 'பெண் சிசுக் கொலைகள்' பற்றிய கட்டுரைகள் பரபரப்பூட்டி பாராட்டப் பெற்றன.

எழுத்தாளர் வாஸந்திக்கு ஏற்



பட்ட சமூகத்தாக்கம் - சமுதாயப் பொறுப்புணர்ச்சி அவ்வப்போது... அரசியல் தொடர்பான கட்டுரைகளாகி... இவரது இன்னொரு முகமான 'பத்திரிகையாளர்' என்ற முகத்தை இதழ்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்திட,

'இந்தியா டுடே'யிலிருந்து அழைப்பு,

தாங்கள் தமிழில் 'இந்தியா டுடே'ஐ கொண்டு வர இருப்பதாகவும், அதன் போக்கு, தரம், வாசகர் மத்தியில் உள்ள மதிப்பு, பற்றி அறிய தமிழுக்கு ஒரு நபர் தேவை. அது உங்களால் முடியுமா என்று 'இந்தியா டுடே' தலைமை கேட்க, சற்று யோசித்தவர் சம்மதம் சொல்கிறார்.

இவ்வாறு கன்சல்டன்ட்'டாக இருந்த வாஸந்திக்கு... இதழாசிரியர் பொறுப்பேற்க முடியுமா? என்று தலைமை ஆசிரியர்... பிரபுசால்வா கேட்க... கரும்பு தின்னக் கூலியா... என்று சம்மதம்.

பத்திரிகைப் பணி நிமித்தம் இப்போது சென்னை வாசம்.

ஒரு பெண் எழுத்தாளர் பத்திரிகையாசிரியரானது அதுவும் அரசியல் பத்திரிகைக்கு... என்ன உணர்கிறார்?

''இந்தியா டுடே சமூகப் பிரக்ஞை உள்ள இதழ். அதன் போக்கும் தரமும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனால்தான் தமிழில் ஆரம்பித்த புதிதில் என்னை இதழ் பற்றி கருத்தறியும் (Consultant) கன்சல்டன்டாகக் கேட்டபோது மகிழ்ச்சியுடன் சம்மதித்தேன். எனக்கு இயற்கையிலேயே அமைந்து விட்ட அரசியல் ஆர்வம் - இங்கு பணிபுரிய பெரிய உதவியாக இருக்கிறது.

''அரசியலில்... பெண்கள் சாதிக்கிற போது.. ஒரு பெண் பத்திரிகைத் துறைக்கு வரக் கூடாதா?''

எதிர் கேள்வி வருகிறது.

''நான் எழுத்தாளர்தான்... ஆனாலும் இந்தியா டுடே வந்தபிறகு... ஒரு கருத்தை - செய்தியை எப்படி மக்களிடம் கொண்டு சேர்க்க வேண்டுமென்ற பாடத்தை நிறையவே கற்றுக் கொண்டிருக்கிறேன்.''

மகிழ்ச்சியுடன் பதில்.

'இந்தியா டுடே' அரசியல் பத்திரிகை மட்டுமல்ல. பிற விஷயங்களுக்கு இடமுள்ள பத்திரிகை என குறிப்பிடுகிறார்.

இன்றைய பத்திரிகைகள் நல்ல விஷயத்தை விட தீயனவற்றை மக்களிடம் கொண்டு செல்வதைத் தான்

விரும்புகின்றன. ஆர்வம் காட்டுகின்றன. இது ஒரு புகார். நியாயம்தானே இது?

''இது நியாயமில்லை. நிறைய தீயன நடப்பதால்தான் வெளியிடுகின்றன. எல்லா உண்மைகளும் மக்களைச் சென்றடைய வேண்டும். கொண்டு சேர்ப்பது பத்திரிகைகளின் கடமை அல்லவா? பிரச்சினைகளைச் சொல்லாமல் விடுவது எந்த வகையில் சமூகப் பொறுப்புள்ள செயல்...?''

ஐ.ஐ.டி.யில் இன்ஜினியரிங் படிக்கிறார்.

''வாழ்வின் ஒவ்வொரு பகுதியும் சுவாரஸ்யம் என்பது இவரது கருத்து. திருமணமானது... குழந்தைகளுக்கு தாயானது என ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிலைகள். காலம், வயது, முதுமை என்பதில் கவலை தேவையில்லை. குழந்தைகளிடம் கூட நான் எவ்வளவோ கற்றுக்கொண்டேன்'' என்கிற இவரது இளமையின் ரகசியம் இதுதானோ?





காரமன பதில்.

இதுவரை ஏராளமான சிறுகதைகள், 25-க்கும் மேற்பட்ட நாவல்கள் எழுதியிருக்கும் வாஸந்தி பத்திரிகையிலும் சாதனைத் தடம் பதித்து வருகிறார். குடும்பம் - குடித்தனம் எல்லாவற்றையும் துறந்து 'இந்தியா டுடே'வுக்காக சென்னையில் தங்கியிருக்கிறார். இவரது ஆர்வமும் பொறுப்பும்... இதிலிருந்து புரியுமே.

கணவர் - குடும்பம் டெல்லியில். இருமகன்கள். இருவருமே... தந்தை வழியில்! மூத்தவர் இன்ஜினியர். அமெரிக்க முகாம். இளையவர்

ஆரம்பத்திலிருந்து ஊக்கப்படுத்திய அம்மா, அப்புறம் கணவர், மகன்கள் எல்லாருமே தன் ஆதரவாளர்களாக உதவித் தூண்களாக உணர்ந்து மகிழ்கிற வாஸந்தி... தன் இப்போதைய சிந்தனை எல்லாமே அடுத்த நாவல்.. கதை எதைப் பற்றி எழுத வேண்டும் என்பதைப் பற்றியதல்ல. அடுத்த இதழ்.. எப்படி செம்மையாகச் செய்ய வேண்டும் என்பதைப் பற்றியே இருக்கின்றன என்கிறார். சாதிக்க விரும்பியவர் சாதித்தே வந்திருக்கிறார். இதழியலிலும் சாதிக்கட்டும்.

— ராகி

படங்கள்: மகாவிஷ்ணு

# அனுபவம் ஒரு பாடம்

ரூ.50/- பரிசு பெறும் கட்டுரை

**சா**தரணமாக நம் வீடுகளில் குழந்தைகளுக்கு Amul, Farex போன்ற குழந்தை உணவு டின்கள் காலியானதும்... அவைகளில் பருப்பு, சர்க்கரை போன்றவற்றை போட்டு வைப்பதில் தவறேதும் இல்லை. ஆனால், பாருங்கள் இந்த மாதிரி போட்டு வைத்ததால் ஏற்பட்டது ஒரு விபரீதம்!



ஒருமுறை நானும் என் கணவரும் கோழிக் கோட்டிலிருந்து விரைவு புகைவண்டியில் வந்து கொண்டிருந்தோம். நாங்கள் இருந்த பெட்டியிலேயே ஒரு மலையாள முஸ்லீம் தம்பதியர் 5 மாத பெண் குழந்தையுடன் பயணம் செய்தனர். பயணத்தின் போது குழந்தை அழத் தொடங்கியது. உடனே அந்தத் தாய் பிளாஸ்க்கிலிருந்த சுடு தண்ணீரை ஒரு டம்ளரில் ஊற்றி, சிறிது சர்க்கரையும் போட்டு கடைசியாக அமுல் டின்னை திறந்த போது... அதில் நேந்திரங்காய் சிப்ஸ்தான் இருந்தது. ஆம்! அமுல் டின்னுக்கு பதிலாக... சிப்ஸ் போட்டிருந்த டின்னை கொண்டு வந்திருந்தார்கள். கணவன் மனைவியை குற்றம் சொல்ல, மனைவி கணவனை சொல்ல, குழந்தை ஒரு புறம் கதற, பாவம் தாய்ப்பால் வற்றிப் போன அத்தாயுள்ளம் கண்ணீர் விட மற்ற பயணிகளும் செய்வதறியாது கைகளை பிசைய... குழந்தையின் நிலைமை மிகவும் மோசமானது. அடுத்த ஸ்டேஷன் வர ஒருமணி நேரம் ஆகும். மற்ற பயணிகளிடம் உதவி பெற விசாரித்தும் பயனில்லை. அந்தக் குழந்தை தண்ணீரையும் குடிக்க மறுத்தது. ஒரு வழியாக அடுத்த ஸ்டேஷன் வந்ததும் என் கணவர் இறங்கி ஸ்டேஷனுக்கு வெளியே போய் அமுல் டின் வாங்கி வருவதற்குள், இங்கே குழந்தையின் தந்தை ஸ்டேஷன் மாஸ்டர், டிரெயின் கார்டு ஆகியோரிடம் நிலைமையை விளக்கி வண்டியின் புறப்படுதலை சற்று தாமதமாக்கி... அப்பப்பா...! புதிய அமுல் டின்னை பார்த்ததும் தாயின் முகத்தில் தான் எத்தனை பிரகாசம்? குழந்தையும் வயிராறப் பால் அருந்தியது.

இது எல்லா தாய்மார்களுக்கும் ஒரு நல்ல பாடமாகும்!

— எம்.ஜெயாகணபதி,
சென்னை-23.

# மாங்கல்யம் தந்துனானே...

## மணமகள் தேவை

முஸ்லீம் மதத்தை சேர்ந்த, சொந்தமாக மில் நடத்தும் 23 வயது மணமகனுக்கு அன்பும், அடக்கமும் நல்ல குணமும் கொண்ட முஸ்லீம் மதத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. பெட்டி எண் - 170

வாணிச் செட்டியார் இனத்தைச் சேர்ந்த, 28, வயது, 8-ம் வகுப்பு வரை படித்த, பெங்களூர் இந்தியன் எக்ஸ் பிரஸில் பணிபுரியும், மாதம் ரூ.3,000/- வருமானம் உள்ள மணமகனுக்கு அதே இன மணமகள் தேவை. புகைப்படம், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் - 178

வயது 36, B.Com படித்த 5' 5'' உயரமுள்ள சொந்த தொழில் மூலம் மாதம் ரூ.3,000 முதல் ரூ.5,000 வரை சம்பாதிக்கும் மணமகனுக்கு (அஸ்வினி நட்சத்திரம்) பிராமண மணமகளோ, அல்லது சுத்த சைவமான மணமகளோ தேவை. எதிர்பார்ப்புகள் அதிகமில்லை. பெட்டி எண் - 189

தெலுங்கு பிராமின், வெலநாடு பிரிவு, ஸ்ரீவத்ஸ கோத்ரம், வயது 28, படிப்பு B.Com., புனர்பூச நட்சத்திரம், தனியார் துறையில் வேலை, சம்பளம் ரூ.1,400/- வருமானமுள்ள மணமகனுக்கு அழகிய குடும்பப் பெண் 25 வயதுக்குள் தேவை. ஜாதகம், போட்டோவுடன் தொடர்பு கொள்க. உட்பிரிவும் சம்மதம். பெட்டி எண் - 190

வயது 25, உயரம் 175 Cm. மாநிறம், +2 படித்த தனியார் கம்பெனியில் வேலை பார்க்கும் ரூ.1,600/- வருமானமுள்ள மணமகனுக்கு நல்ல குணமுள்ள ஓரளவு படித்த வன்னியர் இன மணமகள் தேவை. பெட்டி எண் - 191

வாணியச் செட்டியார், ஹஸ்தம், வயது 28, உயரம் 170 செ.மீ. டெல்லியில் மத்திய அரசாங்கத்தில் சுருக்கெழுத்தராக வேலை பார்க்கும் ரூ.2,800/- வருமானமுள்ள வரனுக்கு வேலையிலுள்ள, நல்ல குடும்பப் பெண் தேவை. பெட்டி எண் - 192

செங்குந்த முதலியார், சிவ கோத்ரம், 177 Cm, B.E. இன்ஜினியர், வயது 33, மத்திய அரசு, இந்துஸ்தான் பெட்ரோலியம் கார்ப்பரேஷனில் டெபுடி மானேஜராக பணிபுரியும் ரூ.5,500/- வருமானமுள்ள மணமகனுக்கு, நன்கு படித்த, குடும்ப பாங்கான, அன்பும் பண்பும் நிறைந்த மணமகள் தேவை. பெட்டி எண் - 193

செங்குந்த முதலியார், மாநில காவல் துறையில் தலைமைக் காவலர், வயது 28, உயரம் 173 செ.மீ. மாதவருமானம் ரூ.2.200/- மூல நட்சத்திரம். இந்த வரனுக்கு அழகும், பண்பும் கொண்ட மணமகள் தேவை. உடன் திருமணம். உட்பிரிவுகள் சம்மதம். புகைப்படம் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் - 194

வடமாள், நைத்ரூப காசியப கோத்ரம், சதய நட்சத்திரம், வயது 27, உயரம் 168. செ.மீ. B.Sc., படித்து சொந்தமாக ஏஜென்சி நடத்தும் மாதம் ரூ.6,000/- வருமானமுள்ள மணமகனுக்கு வங்கி, அரசாங்க உத்தியோகம் பார்க்கும் மணமகள்

தேவை. ஜாதகம், போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் - 195

இந்து விஸ்வகர்மா வயது 29. சிகப்பு நிறம், உயரம் ஐந்தரை அடி. பொற்கொல்லர் தொழில், நல்ல வருமானமுள்ள மணமகனுக்கு குடும்பப் பாங்கான மணமகள் தேவை. போட்டோ ஜாதகத்துடன் விண்ணப் பிக்கவும். பெட்டி எண் - 196

இந்து விஸ்வகர்மா, வயது 27, படிப்பு B.A., D.A.Sc., T.T.C. வங்கியில் வேலை மற்றும் பதிப்பு ஆசிரியர், மாத வருமானம் ரூ.2,000/- இந்த வரனுக்கு தெய்வ பக்தியுள்ள, குடும்பப் பாங்கான மணமகள் தேவை. எம்மதமும் சம்மதம். புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் - 197

## மணமகன் தேவை

வயது 29, படிப்பு B.Sc., தெலுலுங்கு பிராமிண், 5' 5'' உயரமுள்ள டெக்னிக்கல் அஸிஸ்டெண்ட் ஆக பணிபுரியும் மணமகளுக்கு ஏற்ற மணமகன் தேவை. பெட்டி எண் - 198

தமிழ் வாணியர் செட்டியார், வயது 25, 160 செ.மீ., B.E., படித்து, தனியார், கல்லூரியில் விரிவுரையாளராக வேலை பார்க்கும், அழகான, குடும்பப் பெண்ணுக்கு, சுமாரான வசதியுடன், படித்து வேலையிலிருக்கும், வரதட்சணை எதிர்பார்க்காத அதே இன மணமகன் தேவை. பெட்டி எண் - 199

தெலுங்கு பிராமிண், வேங்கி நாடு திருவோணம், கௌசிக கோத்ரம், வயது 31, 162 உயரம். அரசு உத்யோகத்தில் இருக்கும் பெண்ணிற்கு தகுதி வாய்ந்த மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் - 200

செங்குந்த முதலியார், சிவ கோத்ரம், அஸ்வினி, படிப்பு B.Sc., / DCM 30/151cm. குடும்ப பாங்கான பெண்ணிற்கு அன்பும், பண்பும் நிறைந்த மணமகன் தேவை. பெட்டி எண் - 201

அகமுடையார், வெள்ளாள முதலியார், வயது 20, உயரம் 5 அடி, படிப்பு S.S.L.C. நிறம் - மாநிறம், செவ்வாய் தோஷமுள்ள மணமகளுக்கு அதே இனத்தில் செவ்வாய் தோஷமுள்ள மணமகன் தேவை. பெட்டி எண் - 202

வயது 25, உயரம் 152cm. சிவப்பு நிறம், செவ்வாய் தோஷமுள்ள ரூ.2,300/- சம்பளத்தில் ஆசிரியை வேலை பார்க்கும் பெண்ணுக்கு செட்டியார் இனத்தில் ஆசிரியர் அல்லது அரசுப் பணியிலிருக்கும் நற்குணமுள்ள மணமகன் தேவை. பெட்டி எண் - 203

கன்னட மாத்வ வசிஷ்ட கோத்ரம் படிப்பு B.Com., 29/5'/920 சித்ரா நட்சத்திரம், நடுத்தர குடும்ப பெண்ணிற்கு மணமகன் தேவை. பெட்டி எண் - 204

பிராமணர் பாரத்வாஜ கோத்ரம், வயது 24, அசுவினி, +2 படித்த குடும்ப பாங்கான பெண்ணிற்கு மணமகன் தேவை. பெட்டி எண் - 205

வயது 29, கத்தோலிக்க வெள்ளாளர், M.A., B.Ed., சென்னை அரசு பள்ளியில் வேலை பார்க்கும் அழகான பெண்ணுக்கு அரசுப் பணியிலுள்ள கத்தோலிக்க மணமகன் தேவை. ஜாதி முக்கியமில்லை. -டி எண் - 206

**மேகலா வாசகர்களுக்காக இந்த 'மணமக்கள் தேவை' விளம்பரம் இலவசமாக வெளியிடப்படுகிறது. விபரம் அனுப்புகிறவர்கள் சுருக்கமாக அனுப்ப வேண்டுகிறோம். விளம்பரம் தொடர்பாக தொடர்பு கொள்ள விரும்புபவர்கள் பெட்டி எண் குறிப்பிட்டு எழுதவும். உரிய நபருக்கு நாங்களே அனுப்பி வைப்போம்.**

**— ஆசிரியர்**



# சினிமார்க்கெட்

★ தமிழ்ப் புத்தாண்டில் வெளியான படங்களில் எதிர் நீச்சல் போட்டு பத்திரமாய், கரைசேர்ந்த படங்கள் மூன்றே மூன்று படங்கள்தான். அரண்மனை கிளி, உள்ளே வெளியே, பிரதாப். கமல்ஹாசனின் கலைஞன் உட்பட பிறபடங்கள் 'தரிகிணதோம்' போட்டுக் கொண்டிருக்கின்றன.



★ பிரதாப் தப்பித்துக் கொண்டதில் அர்ஜுன் ஏக சந்தோஷத்தில் இருக்கிறார். சேவகனை விட 'பிரதாப்' அசத்தல் - என்ற விமரிசனங்கள் உற்சாகடானிக்காக அர்ஜுனுக்குள் இறங்கியுள்ளது. உடனே அடுத்த படத்திற்கான வேலைகளில் இறங்கி விட்டார். விரைவில் விஜயகாந்தையும் வைத்து இயக்கப் போகிறாராம்.

★ பவித்ரனை பகைத்துக் கொண்ட கே.டி.குஞ்சுமோன் இப்போது அர்ஜுனை வைத்து ஷங்கர் இயக்கத்தில் 'ஜென்டில் மேன்' படத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். வேலை கிடைக்காத இளைஞன் வேடத்தில் அர்ஜுன் அசத்தியிருக்கிறாராம். வசனம்: நம்ம பாலகுமாரன்.



★ தமிழைத் தவிர பிற மொழிக்கு போக மாட்டேன் என்று உறுதியாயிருந்த விஜயகாந்த் தற்போது மனம் மாறி விட்டார். தனது படங்களெல்லாம் தெலுங்கில் 'டப்'பாகி சக்கை போடு போடுவதால் முதன் முறையாக நேரடி தெலுங்குப் படம் ஒன்றை ஒப்புக் கொண்டிருக்கிறார்.

★ ஃபர்ஹின் என்றால் உங்களுக்குத் தெரியாது. பிந்தியா என்றால்? கலைஞன் படத்தில் கமலுக்கு ஜோடியாக நடித்துள்ளதே அதே பிந்தியாதான். இந்தியில் டஜன் படங்களை முடித்தவர். தமிழில் முதல் படமே கமலுடன் என்ற பிரமிப்பிலிருந்தே விடுபடாத பிந்தியாவுக்கு மேலும் இன்ப அதிர்ச்சி! ரஜினிகாந்த்துக்கு ஜோடியாக நடிக்கவிருக்கிறாரே... இருக்காதா பின்னே?!

— ஜெயந்தி

கதைகளில் வரும் பெயர்களும், நிகழ்ச்சிகளும் கற்பனையே. அவற்றைத் திருத்தி அமைக்கவும், கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. பிலிமாலயா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் நா.மனோகரன். முகவரி: 96, காம்தார் நகர், மகாலிங்கபுரம், சென்னை - 600 034. தபால் பெட்டி எண்: 1251, தொலைபேசி: 8277992 Grams: "FILMSPEAK", Telex: 041-25 158, Fax: 91-44-8250550

*For fair girls with flair for a car the colourful world of model*

**Here is promising chance from**

# Monalisa
## Media Modelling

**To climb the ladder of Fame Fortune & Films**
**Modelling is the QUICKEST REACH & EASIEST APPROACH**





விடுப
சி! ரஜினி
க்கிறாரே...

— ஜெயந்தி

***Reliability & Reputation –***

***the other aspects of modelling is assured as we are backed by FILMALAYA which has envious rapport with both Advertising & Film magnates.***

***If you are girl, between 18 and 30 years of age and feel you are cute enough to pose before camera – photogenic***
***All you have to do is SEND atleast TWO COLOUR PHOTOGRAPHS of yours – one straight, another profile with your educational/and exceptional qualification, in confidence, to***

Mrs. **KAMALA**
Chief Media Co-ordinator (Madras)
**"MONALISA"**
96, KAMDAR NAGAR
MAHALINGA PURAM, MADRAS-600 034.
GRAMS: "FILMSPEAK" TELEX: 041-25158
FAX: 91-44-8250550

Mrs. **GEETHA**
Media Co-ordinator (Bombay)
**"MONALISA"**
21, Janakiram Co-op Housing So
Duncan Causeway Road,
Sion, Bombay-400 022.

யே. அவற்றைத்
உரிமை உண்டு.
யர் நா.மனோகரன்.
00 034. தபால் பெட்டி
, **Telex: 041-25 158, Fax:**

We have, already, reputed concerns like INDIA HERBALS COSMETIC & VASTRA

MEKALA TAMIL MONTHLY Y '93 PRICE Rs.4/- REGD. NO. TN/M